ஓம் பரப்பிரம்மணே நம:

**64-பக்கங்கள்.**

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கவல்லதான விகடமும், ஆநந்தகரமான அநுபவ விநோத ஞானகலா விலாஸங்களும் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள உயரிய மாதப் பத்திரிகை.

பத்திராசிரியர்:—திரிசிரபுரம்-எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு.

" எண்ணிய எண்ணியாங் கெய்துப; எண்ணியார்
 திண்ணிய ராகப் பெறின்." (திருக்குறள்.) 

| கமலம்-7. | சென்னை ஆங்கீரஸளு கார்த்திகைமீ 1வ | இதழ்-80. |
| --- | --- | --- |
| Vol. 7. | 1932-ம்ளு நவம்பர்மீ 16வ | No. 80. |




"ஈசனை வணங்கு" நாம் தினந்தோறும் செய்யும் பாபம் நாசமாக வேண்டி ஈசனைப் பிரார்த்திக்கவேண்டும். நம்மை அழைத்துப்போக சித்தமாய்க் காத்திருக்கும் காலனை மோசம் செய்வதற்கும் ஈசனது பாதமே கதி. இவ்விதமே செய்து மார்க்கண்டன் மறலியின் துன்பத்திலிருந்து நிவர்த்தி பெற்றான். பக்தர்களுக்குத் தாமரைப் புஷ்பம்போல் மிருதுவாயிருக்கும் ஈசனுடைய பாதம் கொடியனாகிய எமனுக்குக் கூர்மையான வாளைப்போலிருந்தது. ஸகல துக்கங்களிலும் பெரிதான மரணம் எல்லோருக்கும் பீதியை விளைக்கிறது. ஆதலின், அந்த பயம் நீங்கிச் சுகமடைய வேண்டி நாம் ஸதா பரமேசுவரனைப் பிரார்த்திக்கக்கடவோம்.

ஃ

"**குதர்க்கம் கொடிய துக்கம்**" சிலர் மார்க்கண்டனைக் கண்டது யார்? மறலியைப் பார்த்தது யார்? ஈசுவரன் அவனை உதைத்தபோது யார் அருகிலிருந்தவர்? இதை அறிவாளியும் நவநாகரீகப்பிரியனுமாகிய நான் நம்புவேனோ என்பர். முன்னோர்களாகிய மகரிஷிகள் கூறிய மார்க்கண்டேய உபாக்யானத்தை நம்பாத இவர்கள் அநேக ஆயிரம் வருஷங்களுக்குமுன் ஸாக்ரடிஸ் இருந்தாரென்றும், ஜூலியஸ் ஸீஸர், ஸிஸரோ, கான்யூட் முதலிய புத்திமான்களிருந்தனரென்றும், மகா அலெக்சாந்தர் படையெடுத்து அநேக தேசங்களை ஜெயித்தாரென்றும் அந்யதேச சரித்திரக்காரர்கள் கூறுவதை மட்டும் நம்புகிறார்களே! இதென்ன ஆச்சரியம்! நமது இதிகாஸ புராணங்கள் பொய்;

அந்ய தேச சரித்திராசிரியர்கள் கூறுவது மட்டும் மெய்யா ? இது அவிவேகத்தால் விளைந்த கேடு. இதைவிட அவமானம் வேறில்லை. அவரவர் மதத்தை அவரவர்கள் தெரிந்து கொள்ளவேண்டும். சுகப்பிராப்தியும் துக்க நிவர்த்தியுமே மனிதர் தேடுகின்றனராகையால் மதஞானம் அதற்குப் பிரதான கருவியாக அமையவேண்டும்.

ஃ

"கடவுள் ஒருவர் உளர்" அவர் சச்சிதானந்தம் என்றும், ஸகல உலகத்தையும் அவரே படைத்து, அவரே அதைக் காத்து, அவரே அதை அழித்து லயப்படுத்துபவரென்றும், அத்தகைய பரம்பொருளிடம் நாம் பரம பக்தி செலுத்தவேண்டுமென்றும் பலவாறாகக் கூறுபவர்கள் ஆஸ்திகர்கள் என்னப் படுவார்கள். ஆஸ்திகர்கள் என்றால் கடவுள் உண்டு என்னும் கொள்கையுடையவர்கள் என்று பொருள்படும். கடவுள் இல்லை. கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என்று சொல்பவர்கள் நாஸ்திகர்கள் அல்லது நிரீஸ்வரவாதிகள் என்னப்படுவார்கள். இத்தகைய நிரீஸ்வரவாதிகளை ஆட்டுக்குமேல் அரையடி யுள்ளவர்களென்றுகூட நாம் மதியோம். அவர்கள் கல்வி அரைக்கல்வியே. அவர்கள் புத்தி உலக்கைக் கொழுந்தே. அவர்கள் பேசுவது உளறுபடியே! என்றாலும், அவர்களிற் சிலர் சில போலி நியாயங்களை மேற்கொண்டு அடாத வாதங்களை விடாது படிப்பார்கள். கடவுளைப் பார்த்தால் கன சண்டை போடப்போவதாகப் பேசுவார்கள். இதற்குத் திருஷ்டாந்தமாக ஆங்கில மேதாவிகளுள் ஒரு கதை நடையாடுவதுண்டு. அதை இங்கே கூறுகிறோம்.

ஃ

"புது உலகம் சிருஷ்டித்த தத்துவசாஸ்திரி" தத்துவ சாஸ்திரங்களைத் தலை கீழாய்ப் புரட்டியும், விஞ்ஞான சாஸ்திரங்களை விழுங்கி யேப்பமிட்டும் மெத்தக் கர்வம் படைத்த தத்துவ சாஸ்திரியா ரொருவரிருந்தார். அவர் பெயர் நமக்கு அவசியமில்லை. ஒரு நாள் உண்டு உடுத்து உற்சாகங்கொண்டு குதித்து, "ஓ! அவன் என்ன கடவுள்! எனக்கு இருக்கும் புத்திகூட அவனுக்குக் கிடையாது போலிருக்கிறதே! ஏ! உளறுவாயா! குளறுபடியா! உன் சிருஷ்டி யனைத்தும் ஊழலுள்ளதாகவே யிருக்கிறது. ஒருவருக்கொருவர் பொறாமையும், பேராசையும், கொலையும், புலையும், சோரமும், காமமும் ஆ! ஆ! இவைகளெல்லாவற்றையும் மனிதர் மனதில் ஏன் தோன்ற வைத்தனை! ஏ! கடவுள் என்னும் காதகா! பிரகஸ்பதி யென்னும் தோதகா! ஏ! ஜூபிடர்! ஏ! ஜூபிடர்! (Jupiter) உன் புத்தி மிகவும் சக்தி யுள்ளதுதான்! ஹா! ஹா! என்று கதறுது கதறினன். உடனே பட் என்றது. படார் என்றது. மேக வாகனத்தின் மீது ஜூபிடர் தெய்வம் தத்துவ சாஸ்திரியின் கண்ணெதிரே தோன்றிற்று. "எதற்காக என்னை அழைத்தாய்? சொல்! சொல்! எதிரில் நில் நில்! பயப்படாதே சொல்! பயத்தை யெல்லாம் வெல்" என்றது.

ஃ

"சமயத்திற்கேற்ற தைரியம்வேண்டும்" இதை சாஸ்திரியார் மறக்கவில்லை. 'கோணத்'தைரியம் 'குஸா'லாய்க்கொண்டு, "ஆம் ஜூபிடர்! ஓம் ஜூபிடர்! உன் சக்தி எனக்கிருந்தால் எவ்வளவோ புத்தியோடும், எவ்வளவோ யுக்தி

---

ஒருவரிடம் முதன்முதலாக உண்டாகிற மனோ அபிப்பிராயமே கடைசியில் உண்மையாகிவிடுகிறது.

யோடும் உலகசிருஷ்டி செய்திருப்பேன்! ஏன் மனிதருக்குள் இவ்வளவு வித்தியாஸம்? ஏன் அவர்களுக்குப் பேராசை யிருக்கவேண்டும்? ஏன் அவர்களுக்குப் பொறாமை யிருக்கவேண்டும்? எத்தனை கெடுதி, எத்தனை சேவலம், எவ்வளவு காமம் இவைகளால் உண்டாகின்றன?" என்று தத்துவ சாஸ்திரி தடபிடலாய்ப் பேசினார். "ஆம் சாஸ்திரி! நல்லது சாஸ்திரி! நீ மிகவும் கெட்டிக்கார சாஸ்திரி! நீ உன் நுட்ப புத்தியோடே வேறொரு புது உலகை சிருஷ்டி செய்ய இதோ அனுமதி கொடுத்தேன். அவ்விதமே செய்து பார்" என்று ஜூபிடர் தெய்வம் பிரஸாதித்து மறைந்தது. தத்துவ சாஸ்திரியும் புது உலகை சிருஷ்டி செய்து விட்டார். பொறாமை, கோபம், பேராசை, காமம், ஊர் இச்சை முதலியன எதுவும் அந்த உலகில் இல்லாததால் அந்தப் புது உலக ஜனங்கள் எந்தக் காரியத்திலும் எந்த விருப்பமுமின்றி உண்பதும் உறங்குவது மாகி, பிறகு உணவுதேடவே வழி தெரியாதவராகித் தத்தளித்தனர். பசி பசி என்று அலறினர்! ஆசை இருந்தாலன்றோ உழைப்பதற்குத் தூண்டும்? அது தான் அப்புது உலகிலில்லையே! சாஸ்திரியாருக்கு வெட்கம் அதிகமாய் ஏக்கம் மிகுதியாய் விட்டது! இதோடேயா விட்டது! இந்தத்தொல்லை! அவ்வூரில் ஸ்திரீ புருஷர்களுக்குள் காமவிருப்பம் உண்டாக ஏது வில்லாதிருந்ததால் புத்திர சந்தானத்திற்கே இடமில்லாதிருந்தது. வரவரப் பிரஜைகள் செத்துக் குறைந்து கொண்டே வந்தார்கள். கடைசியில் புதுப் பிரஜாவுற்பத்தி ஒன்று மில்லாது யாவரும் மரித்துத் தத்துவ சாஸ்திரியார் மட்டும் தனியாய் நின்று விட்டார். எதுவும் பட்டால் தெரியும். தத்துவசாஸ்திரி ஏ! ஜூபிடர்! பரதேவா? மஹாதேவா! என்று கதறினர். உடனே மின்னல் மாலையோடும் இடி யோசையோடும் எதிரே தோன்றினர் இணையில்லாத ஜூபிடர்! "ஹே! தத்துவ சாஸ்திரி! எத்தன்மைத்தாயிருக்கிறது உத்தமமான உன் புதிய உலகம்?" என்று கேட்டு நகைத்தார். சாஸ்திரியாரும் உள்ளவற்றைச் சொன்னதோடும் விடாமல் "உன் உலகத்தில் ஒரு நல்ல உறுதிப்பாடு கிடையாது; நல்லதென்று வைத்துப் பொல்லாததையும் ஏன் அதனருகே வைக்கவேண்டும்? ஆவலை மாத்திரம் உண்டாக்கி நல்ல விஷயத்துக்கே அதைச் செல்லும்படி வைத்தல் கூடாதா? அதைவிட்டுக் கெட்டதையுங்கூட ஒட்டவைத்து விட்டு ஏன் நீ சமாளிக்கிறாய்?" என்று தடபிடலாய்ப் பேசினார். ஜூபிடர்க்குக் கோபம் வந்து, "ஏ! மூடா! அது ஆகாத காரியம்; கெட்டதிருந்தால் தான் நல்லதும் ஏற்படும்; நீ புது உலகம் சிருஷ்டி செய்த பவிஷு நிமிஷத்தில் தெரிந்தது பார்த்தாயா? அடக்க ஒடுக்கத்தோடும் இனி உன் அலுவலைப் பார்த்துச் செல்" என்று ஆவேஸமாய்ச்சொல்லி ஆகாஸத்தில் மறைந்தார். சாஸ்திரியார் தமது சரக்கை சாக்கடையில் போட்டு வீடு சென்று வினையைத் தொலைத்தார். இத்திருஷ்டாந்தத்தால் எவ்வுண்மை விளங்குகிற தெனில், அற்ப அறிவு படைத்த அதாவது கிஞ்ஜக்ஞர்களாகிய நாம், பேரறிவு பூண்ட அதாவது சர்வக்ஞயனுகிய பெருமான் செயலில் குற்றங்கூறுவது, கிணற்றுத் தவளை நாட்டு வளப்பம் பேசுவது போன்றதாயிருக்கும் என்பதே.

ஃ

"நிச்சய ஞானம் உண்டாவது அருமை" முன்னொரு ஸமயம் ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி அர்ஜுனன் "ஸ்வாமி, கங்கையில் மூழ்கிய ஒவ்வொருவரின் பாபமும் தொலைகிறதென்று சாஸ்திரங்கள் பகருகின்றனவே. அவ்வாறாயின், இந்நகரிலுள்ள ஜனங்களெல்லோரும் புண்யசாலிகளன்றோ? ஒருவரேனும் நா

கத்துக்குப் போகமாட்டார்களே" என்றான். அதற்குக் கண்ணன் "அடே அப்படியல்ல; கங்கா நதியில் ஸ்நானம் செய்தால் ஸகல பாவங்களும் பறக்கு மென்பது நிச்சயந்தான். ஆயினும், அநேக ஜனங்களுக்கு ஸம்சய முண்டாவ தால் பாபம் ஒழிகிறதில்லை. அதனால் நிச்சய ஞானம் உண்டாவதும் அருமை" யென்று கூறி, அதை நிரூபிக்குமாறு அடியில் வரும் யுக்தியைச் செய்தார். விருத்தனைப்போல் வேஷம் பூண்டு மரணத்தறுவாயிலிருந்தார். அர்ஜுனன் சிறு பிள்ளையைப்போல் பக்கத்திலிருந்து புலம்பிக் கொண்டிருந்தான். அநேக ஜனங்கள் பிராதக்காலத்தில் கங்கையில் நீராடிச் செல்லும்போது கிழவன் படும் அவஸ்தையைப் பார்த்து மன மிரங்கி "ஐயோ! அந்தக் கிழவருக்கு ஏதே னும் மருந்து கொடுக்கப்படாதா" என்றனர். சிறுபிள்ளை அவர்களைப் பார்த்து "உங்களில் யாரேனும் புண்யசாலியா யிருந்தால் மட்டும் என் தந்தை யைத் தொடுங்கள்; அவர் உடனே வியாதி நீங்கி ஸௌக்கிய மடைவார்" என, எல்லோரும் நான் பாபி, நீ பாபியென்று அப்புறம் போய் விட்டனர். அன்று சாயங்காலமாயிற்று. ஒருவருக்காவது கிழவரைத் தொடத் துணிவான மனம் வரவில்லை. தாங்கள் பாபி என்ற ஸம்சயம் ஒவ்வொருவரையும் பிடித் துக்கொண்டிருந்தது. கடைசியாக, ஒரு சூத்திர ஜாதியினன் ஓடி வந்து "ஐயா, நான் கங்கையில் மூழ்கி வருகிறேன், சற்றுப் பொறுத்துக்கொள் ளுங்கள்" என்று ஓடிப்போய் பாகீரதியில் நீராடி ஸர்வ பாபங்களும் தொலைந்ததென்று தன்னுள் நிச்சயித்தவனாய்க் கிழவரைத் தொட்டு உபசரித் தான். உடனே அவர் நோய் நீங்கி எழுந்தார். ஆகவே, நிச்சய ஞான மூண் டாவது லக்ஷத்தில் ஒருவருக்குத்தான் என்பது நிரூபிக்கப்பட்டது.

ஃ

"ராம, ராம, ராம" ராமா என்று ஒரு தரம் உச்சரித்தளவிலேயே ஸமஸ்த பாபங்களும் விலகி விடுவதாயிருக்க, மறுமுறையும் கூறுவானேன்? தங்களின் பாபங்கள் யாவும் விலகியதென்று அறிந்த பிறகுங்கூட ராமத் தியானம் செய்வானேன் என்பது வினா? "ராமா" என்ற சொல்லிலுள்ள அமிர்த மயமான ஆநந்தத்தில் மயங்கியே மீண்டும் மீண்டும் ராமா, ராமா என்று தியானித்து அந்த ஆநந்த ஜோதியில் லயித்துத் தங்களை மறந்து விடுகிறார்கள். அத்தகைய பரிபூரணாநந்தவாரிதியைத் தியானத்தின் மூலமாக நாம் பெறக் கடவோம். ஓம் தத் ஸத்.

---

ஒருவருடைய சிநேகிதர்கள் இன்னொருவருக்குச் சிநேகிதர்களாவதில்லை. அங்கு அவர்கள் மனமும் ஒன்றுபடுவதில்லை. இருவருடைய குணமும் மனமும் ஒன்றுபட்டிராவிட்டால் மித்திரர்களாவது அருமை. ஆனால், வெவ்வேறுபட்ட குணங்களையுடைய ஸ்திரீ புருஷர்கள் பிறகு ஸதிபதி களாகி விடுவதில், ஒற்றுமையின்றிப் பிரிய நினைத்தாலும், தாலிக்கயிறும் குழந்தைகளும் நடுவே ஓலமிட்டுத் தடுக்கின்றன.

---

விவாகத்திற்கென்று புறப்பட்டு வருவோரின் சிரமங்கள்—கலியாணப் பந்தலி லிருந்தவாறே ஒரு "கும்பிடு" போட்டு அனுப்பி விடுவோருக்குத் தெரியவராது. விவாகம் நடத்துவோர் அந்த சமயம் புதிய ராஜாக்களாகவும் நவாப்புகளாகவும் ஆகிவிடுகிறார்கள். அந்த தலைமைப் பதவியை அன்னோர் பெறுதற்காக விரயம் செய்யும் திரவியமும் அபரிமிதமே தான்!




# பிறரைத் தாழ்த்தித் தன்னை உயர்த்துதல்.



ஆயிரம் கற்றிருந்தாலும் அடக்கமான குணமே அழகு தரும். பிறருடைய புத்திநுட்பங்களைப் பெரிதாக எண்ணி, அவற்றிலிருந்தும் தாம் ஏதேனும் கிரகித்துக்கொள்ளப் பார்க்கவேண்டும். எந்த உதவாத மனிதனிடத்திலுங்கூட ஒரு பெரிய ஞானம் மறைந்திருக்கும். அதைத் தெரிந்து பயின்றிடும் அறிவு வேண்டும். அற்ப வஸ்துக்களிடத்திலிருந்துங் கூட மிகச் சிறந்ததாகிய விவேகத்தைப் பெற்ற மேதாவிகள் அநேகர் ஆவர். தாம் இன்னும் கற்க வேண்டியது எவ்வளவோ உண்டென்றும், இதுகாறும் கற்றது சொற்பமே யென்றும் தெரிந்து கொள்வோர்தாம் உண்மையான கல்விமான்களெனப்படுவர். சிலருக்கு இந்த அடக்கமான தன்மையில் புத்தி செல்வதில்லை. தாம் எல்லாமுமே கண்டுவிட்டது போன்ற நினைவு. பிறருடைய விஷயங்களுக்கும், பிறர் இயற்றிய நூல்களுக்கும், பிரபலஸ்தர்களின் காரியங்களுக்கும் தங்களை அபிப்பிராயம் சொல்லும் கர்த்தாக்களாக்கிக் கொள்கிறார்கள். தங்களின் கருத்தைத் தெரிந்துகொள்வதற்குத் தங்களின் காலடியில் மற்றவர்கள் காத்துக்கிடக்க வேண்டுமென்றும் கருதி விடுகிறார்கள். எத்தகைய வித்தியாவந்தர்களையும் தாழ்த்திப் பேசி, அவர்களினும் மேம்பட்ட அறிவுடையோராகத் தங்களைப் பாவித்துக்கொண்டு அலக்ஷியமான தன்மையில் அகங்காரங் கொள்கிறார்கள். மற்றவர்களுக்கு உலகத்தார் கொடுத்துள்ள மதிப்பும் சிலாக்கினைகளும் இவர்களுக்கு அற்பமாகவே படுகிறது. “அவனுக்கு என்ன தெரியுமென்று நினைத்து இப்படி வீணே கொண்டாடுகிறார்களோ” என்று இறக்கிப் பேசுவார்கள். “அவனுக்குக் கிடைத்த அந்த உத்தியோகம் எனக்குக் கிடைத்திருந்தால் அவனினும் எவ்வளவோ மேன்மையாகப் பார்த்திருப்பேன்” என்பார்கள். ஆனால், அந்த உத்தியோகத்திற்காக வேண்டி அவனது மூளை பட்ட

பிரயாசைகளையும், அதனைத் திறமையாக நிர்வகிப்பதில் கொண்ட சிரமங்களையும் இவர்கள் உள் நுழைந்து கண்டறியார்கள். எத்தகைய பெரியோர்களையும், "ஓ! அவரா, எனக்கு மிகவும் தெரிந்தவராயிற்றே, எனது நண்பரல்லவோ" என்று தங்களையும் அப்பெரியோர்களுடன் சேர்த்துக்கொண்டு பேசுவார்கள். ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு குறை சொல்லியபடியே இருப்பார்கள். ஒரு பெரிய நூலை வாசித்து விட்டு—"ஏதோ இருக்கு ஒரு விதமாக" என்று கூறுவார்களேயன்றி, அது சிலாக்கியமாயிருக்கிறதென்று அதன் அருமையையுணர்ந்து ஒருபோதும் ஒப்புக்கொள்ளார்கள். இவர்கள் மதித்தாலும், மதியாவிடினும் அந்த நூலுக்கு இயற்கையிலுள்ள சிலாக்கியையும் கௌரவமும் குறைந்துவிடப் போவதில்லை.

ஃ

பிறரைத் தாழ்த்தித் தங்களை உயர்த்திப் பெருமை பாராட்டிக்கொள்வதில் அவர்களின் விருத்திவழி தடைபட்டுப்போகிறது. இன்னோருடைய அற்ப அறிவு என்றைக்கும் அற்ப அறிவாகின்றதே யொழிய பெருகிச்சென்று மேம்பாடு கொள்வதில்லை. இத்தகையோரை ஏதோ புத்திசாலிகளென்று நினைத்துத் தக்கோர்கள் இவர்களுடன் பழகப்போக, அந்த ஸகவாசம் காரணமாக அன்னோரை இவர்கள் மிக்க அல்பமாக நினைத்து விடுகிறார்கள். இதனால், தங்களின் கௌரவத்தையும் மானத்தையும் காத்துக்கொள்ளும் பொருட்டு அத் தக்கோர்கள் இவர்களை விட்டுப் பிரிந்து புளியம்பழமும் ஓடும்போல் ஒட்டாமலொட்டி ஜாக்கிரதையாக இருக்க வேண்டியும் நேர்கிறது. அதிகமாக இவர்களுடன் நெருங்குமிடத்து மதிப்பு குறைகிறது. இன்னோருடன் எவ்விதத் தொடர்பும் கொள்ளாமலே தூர ஒதுங்கி யிருப்போரை, அவர்களைத் தமக்குக் கிட்டாதவராக எண்ணி இவர்கள் கௌரவிப்பதை நோக்கும்போது, தாங்களும் அவ்விதமே விலகியிருந்து கொள்வதே மதிப்புக்குரிய செய்கையென்று மற்றவர்களும் கருதிக்கொள்ளும்படி யாகிறது.

ஃ

பிறரைத் தாழ்த்திப் பேசுவோர் இயற்கையாகவே புத்திசாலிகள்தான். மற்றவர்களைவிட இவர்கள் சற்று அதிசயமான அறிவுடன் கூடியவர்கள்தான். எதையும் உடனே கிரகித்துவிடத்தக்க சக்தியும் இவர்களுக்கு இருக்கிறது. இத்துடன் அகங்கார குணமும் இடையே நர்த்தனம் புரிவதனால், தம்மினும் மிக்கோராக மற்றவர்களை நினைக்க இவர்களுக்குச் சிந்தனை தோன்றுவதில்லை. மேலும்,

---

வாதத்தில் ஜெயிக்க முடியாதவன் எதிராளியின்பேரில் கற்களை எறிவது பைத்தியக்காரச் செயல்.

இவர்கள் ஒரு தொழிலினுடைய உள் மர்மத்தை வெகு சீக்கிரத்தில் தெரிந்துகொண்டுவிடும் புத்தி நிஷண்ணியம் பெற்றுள்ளாராதலின்—அதைக் கபடமாய் ஏதும் தெரியாததுபோலவே நெருங்கிச் சூழ்ந்து முற்றிலும் அறிந்துகொண்டுவிட்டு—பிறகு அத்தொழிலாளியைத் தாழ்த்தத் தொடங்கிவிடுகிறார்கள். ஒரு கல்விமான் ஒரு நூல் வரைவதற்காகப் பல குறிப்புகளை எழுதிவைத்துக்கொண்டிருக்கிறார். அக்குறிப்புகள் மிகு அந்தரங்கமாகும். அவற்றைக் கொண்டே அவரது பெரும்நூல் தயாராகின்றது. அந்த நூலை உலகும் கொண்டாடுகின்றது. பிறரைத் தாழ்த்தும் தன்மையரோ மிகு கபடமாகவும் நேசமாகவும் அக்கல்விமானுடன் பழகி நின்று தந்திரமாக அந்த அந்தரங்கமான குறிப்புகளை எவ்விதமோ வாசித்துத் தீர்த்துவிடுகிறார்கள். பிறகு நூல் வெளிப்படும்போது, "அதிலுள்ள விஷயங்களெல்லாம் எனக்கு முன்பே தெரியும்; அதை எழுதுவதற்கான குறிப்புகளை ஏற்கெனவே பார்த்துவிட்டிருக்கிறேன்; இந்த நூல் ஒரு பிரமாதமல்ல, சில குறிப்புகளை நானே அந்த நூலாசிரியருக்குக் கொடுத்துமிருக்கிறேன்" என்று அலக்ஷியமாகப் பேசி, அவ்விதமாகத் தங்களாலும் ஒருநூல் எழுதுவது கூடுமென்றும் காட்டிக்கொண்டு தங்களை உயர்த்திக் கொள்வார்கள். இத்தகையோர் மிகவும் பயங்கரமானவர்களாவார். இன்னொருக்குத் தெரியாதபடி நமது ரகசியங்களையும், அந்தரங்கக் குறிப்புகளையும், தொழிலின் மர்மங்களையும் எவ்வளவு வரைக்கும் மறைத்துக் காக்கின்றோமோ, அவ்வளவுக்கும் நன்மை பெற்றவர்களாகவும் ஏமாறாதவர்களாகவும் ஆகலாம். இங்கு ஒரு நூலுக்குத் தெரிவித்த குறிப்பையே ஏனைய வியாபார விஷயங்கட்கும், தொழில்களுக்கும், குடும்ப சங்கதிகட்கும் கொள்க.

ஃ

பிறரைத் தாழ்த்துங்குணம் மற்றவர்களுடைய தொழிலின்—வித்தையின்—வியாபாரத்தின்—ரகசிய நுட்பங்களைச் சூட்சுமமாக அறிந்துகொள்வதனால் உண்டாகின்றது எதையும் அறிவதும், அந்த அறிவிலே தேர்வதும் சிலாக்கினைக் குரியதே. ஆயின், கபடப் போக்கில் அறிவதும், அறிந்து தாழ்த்துவதும், தாங்கள் எவர்களிடமிருந்து விஷயத்தைக் கிரகித்துக்கொண்டார்களோ, அவர்களுக்கே விரோதமாகவும் எதிரிடையாகவும் வேலைசெய்யத் தொடங்குவதும், பிறகு எதிர்கடை வைத்து முந்திய அறிவாளியின் லாபத்தைத் தாங்கள் அடைந்துகொள்ள முயற்சிப்பதும் ஆன பாதக நினைவுகள் எத்துணைக் கொடியன? ஒருவன் செய்கிற வேலையின்

---

ஒருவன் தன்னிடத்திற்கு மறுபடி திரும்பிவர அதிக நாளாகுமென்று தெரிந்தால் அவன் இரவலாக கேட்கும் ஒன்றை அவனுக்குத் தர வெகுவாய் யோசித்துப் பின்னடைகிறார்கள்.

விதங்களையெல்லாம் நட்பாகவே இருந்து அருகிலிருந்தே சுலபமாக அறிந்துகொண்டு, பிறகு அவனை நீக்கிவிட்டுத் தன்னை அந்த வேலையில் அமர்த்திக்கொள்ளும்படியும், அவனுக்கு ஏதுமே தெரியாதென்றும், அவனைவிடத் தான் அதிக திறமையுள்ளவனென்றும் பேசி அவனது எஜமானனை மயக்கி முந்தியவனின் வேலையைத் தான் கைப்பற்றிக்கொண்டு முந்தியவனின் நாற்காலியிலே தான் அமர்ந்துகொள்கிறான். இக்கபட சிரோன்மணியைத் தனக்கு மிகவும் வேண்டியவனாக நினைத்து அவன் எதிரே தன் தொழிலைச் செய்த அறிவாளியோ தான் மதிமோசம்போனதைக் குறித்துக் கலங்குகிறான். தன்னையும், தன் வேலைத் திறத்தினையும்பற்றி அது சமயம் இகழ்ச்சியாய்த் தூற்றப் படுவதை யெல்லாம் தெய்வமே யென்று கேட்டுப் பொறுமைப் படவும் வேண்டியவனாயிருக்கிறான். இவ்விதம் மோசம் போனவர்கள் எண்ணிலர்.

ஃ

ஆகவே, எந்த சங்கதியிலும் ஒரு திரை மறைவு இருப்பதே நலமென்று தோன்றுகிறது. சிலர் நம்முடைய விஷயங்களைக் கிரகித்து. நம்மிடமிருந்து அறிவு பெற்று உயர்ந்து, நமது துணையை மேற்கொண்டே உன்னதம்பெற விரும்பி நம்மை எப்பொழுதும் சுற்றிக்கொண்டு நிற்பார்கள். இன்னோரிடம் கபட நினைவு கிடையாது. நம்மைத் தாழ்த்திப் பேசும் சுபாவமும் இல்லை. தங்களுக்கு ஒரு விஷயம் தவறாகப்பட்டு, அதே விஷயம் நமக்குச் சரியாகத் தோன்றும்போது, அதை ஒப்புக்கொள்ள மறுத்துவிட்டு நம்முடன் எதிர்த்து வாதம் செய்வார்கள். இது அன்புடன்கூடிய உத்தம குணத்தைச் சேர்ந்தது. ஒருக்கால் நாம் நினைத்தது தவறாகவும், அவர்கள் கருதியதே சரியாகவும் இருந்து, அதை நாம் கடைசியில் ஒப்புக்கொள்ளும்படியும் ஆகலாம். இதில் நமக்கு எவ்வித கேவலமும் இல்லை. நம்மிலும் அறிவு குறைந்தவர்களின் மூலமாயும், நம் உதவிக்கு நெருங்கி நிற்போரின் மூலமாயும், நாம் பல பெரிய அறிவுகளைப் பெற்றுக்கொள்ளவும், நம்மைத் திருத்திக்கொள்ளவும் பல தருணங்கள் நேர்வதுண்டு. ஒரு சிறு பச்சைக்குழந்தைகூட நமக்கு ஒரு புத்திமதியைச் சொல்லி நமது தவறைத் திருத்தும்படியு மிருக்கும். இவை யாவும் நல்ல விஷயங்கள். நம்மை வேண்டி நெருங்கி

---

சிலர் தங்கள் வீட்டில் சாப்பாட்டிற்குக் கஷ்டமாயிருக்கையில் பந்துக்கள் வீட்டிற்கும் நண்பர்கள் வீட்டிற்கும் சென்று சில நாள் தங்கி, பந்துக்களிடமும் நண்பர்களிடமும் உன்ன அன்பால் வந்து தங்கியதாகப் பசப்புவார்கள். வேறு சிலர் இந்த வீட்டை விட்டால் வேறு கதியில்லையென்று வாயாரச் சொல்லிவிட்டு வந்து தங்கித் தங்களின் சொந்த வேலைகளை முடித்துக்கொண்டு புறப்படுவார்கள். முன் கூறியவர்களின் கபட மறைப்பு பின் கூறியவர்களிடமில்லை.

னோர்க்கு நம்மால் இயன்றவற்றைப் போதிப்பித்து உயர்த்தவேண்டியதும் நமது கடனேயாக, இவ்வாறு நம்மால் உயர்த்தப்பட்டோரும் நம்மை எக்காலத்தும் கௌரவித்து நமது பெயரை எவ்வளவோ அன்புடனும் உச்சரித்து எந்த நாளும் நம்மைக் கனப்படுத்துவோராயுமிருப்பார்கள். இவர்களுக்குப் பிறரைத் தாழ்த்திப் பேசும் இழிகுணம் ஒருநாளும் உண்டாகாது. இத்தகையோர் எண்ணிக்கையில் மிகவும் சொற்பமேயாதலின், நாம் காண்போரனைவரையும் இவ்வாறான குணசீலர்களென்று நம்பிவிடக் கூடாதென்பதே நாம் இங்கு செய்யும் எச்சரிக்கையாகும்.

∴

பிறரைத் தாழ்த்திப்பேசும் சுபாவமும், மற்றவரை அலக்ஷியமாய் நினைக்கும் சிந்தையும் இழிந்த கபட புத்தியோடும் சேர்ந்த குணமேயாயினும், தன்னிலும் மேன்பட்டோரின் பக்கலிலேயே அதிகமாகப் பழகி நெருங்கியிருப்பதினின்றுமே இந்தத் தீய சுபாவம் உற்பத்தியாகின்றது. கோயிற் குருக்களிற் சிலர் கோயிலிலுள்ள தெய்வத்திற்கு அஞ்சுவது கிடையாது. அந்தத் தெய்வத்தை தங்களுடைய ஜீவனார்த்தத்துக்கு ஒரு துணைக்கருவியாகவும், திரவிய சம்பாதனைக்கான ஒரு யந்திரமாகவுமே நினைத்துவிடுகின்றனர். கோயிலிலுள்ள தர்ம உண்டியைத் தமது வீட்டுச் சொத்தென்றே நினைத்துக் கையிட்டு எடுப்பவர்களும் இல்லாமலில்லை. இது கோயிலிலுள்ள விக்கிரகத்துடன் பழகிப்போனதினாலுண்டான அலக்ஷிய சிந்தையாகும்; அந்தக் கல்லுத்தெய்வம் என்ன செய்யப் போகிறதென்று தாழ்த்தி நினைக்கும் தன்மையே இந்த அக்கிரம விருத்திகளுக்கெல்லாம் ஏதுவாகின்றது. ஒரு வைத்தியரிடம் வேலைக்கிருப்போன் தைலங்கள், பஸ்பங்கள் முதலியன செய்யும் வகையை அறிந்தவனாயிருப்பதில், அந்த வைத்தியருக்கு என்ன தெரியும், எல்லாம் என்னைக்கொண்டல்லவா அவர் செய்து முடிக்கிறார் என்று தாழ்த்திப் பேசுவோனாகிவிடுகிறான். எப்பொழுது இவனுக்கு இந்த இழிகுணம் உண்டாயிற்றோ, அன்றுமுதல் இவன் உயரப்போவதில்லை. தான் — என்ற கர்வசிந்தை மேலிட்டுக்கொள்வதால் அதற்குப் பிறகு அவன் அடக்கமான குணத்துடனிருந்து அந்த வைத்திய பண்டிதரிடம் மற்ற விஷயங்களைக் கற்றுக்கொள்ளப் புத்தி யுண்டாகப்போகிறதுமில்லை. நாளடைவில் தாழ்த்திப் பேசுவதொன்றையே அவன் கற்றுக் கொள்வோனாகவும் ஆகிவிடுவான். ஒரு வியாபார ஸ்தலத்திலுள்ள குமாஸ்தா பெரிய நிபுணரான தனது எஜமானனுடன் அதிகம் பழகுவதனால், அவரைச் சாதாரண

---

பழகிய நெஞ்சுக்குத்தான் போன இடத்தில் தனக்குப் பழக்கமுடையவர்களில்லையேல் அங்குதங்க மனம் இருப்பதில்லை. புதியவர்கள் நம்மை எவ்வளவு உபசரித்தாலும் அந்தப்பழய அன்பினரின் உபசரிப்புக்கு ஈடாவதில்லை.

மாக நினைத்துவிடும் தன்மையிலாகி, என்னாலல்லாவா இவர் இவ்வளவு லாபத்தையும் அடைந்து கொண்டிருக்கிறாரென்றும், நான் ஒருவன் இல்லாவிட்டால் இவரால் என்ன ஆகுமென்றும் அந்த நிபுணரைத் தாழ்த்திப்பேசித் தன்னைப் புகழ்ந்து கொள்ள முற்படுகிறான். இதே விதமாக, உயர்ந்த உத்தியோகத்திலிருப்பவருடன் பழகும் அவரது குமாஸ்தா தன்னால்தான் அவருக்கு அந்தப் பதவி நிலைத்திருக்கிற தென்கிறான். ஒரு அதிகாரியினுடைய பெருமையை விடத் தனக்கே அதிக பெருமை என்று அவருடைய கீழ்தரச் சிப்பந்தி எண்ணுகிறான். மிகு பிரபலம் பெற்ற தன் கணவனைத் தான் அவருடன் பழகும் தன்மையால் சாமான்யராக மதித்து விட்டு, நான் அல்லவா அவருக்கு அடிக்கடி யோசனைகள் சொல்லிச் சரிப்படுத்தி வருகிறேன் என்று அவரைத் தாழ்த்தித் தன்னை உயர்த்திக் கொள்கிறாள். ஒரு மதாசாரியாரது பெருமை உலகெங்கும் பரவி நிற்க, அவரது அருகில் இருப்போரோ அவரை ஒரு சிறு துரும்பாக மதிக்கிறார்கள். உலகத்தை யாளும் அரசனின் பிரதாபம் எங்கும் கன்னியப்படுவதாயிருக்க, அந்த அரசனைச் சுற்றியுள்ளவர்களோ அவ்வேந்தனை மதிப்பில் தாழ்த்தி, தாங்கள் மனம் வைத்தால் இந்த அரசனையே விலக்கிவிட்டு வேறொருவரை அப்பதவிக்கு நியமிக்கும் சக்தி தத்துவம் தங்கட்கு உண்டென்று தங்களை உயர்த்திப் பேசிக்கொள்கிறார்கள். அவ்விதமே, இந்தச் சுற்றி நின்றோர் அரசனைக் கைதியாகப் பிடித்துத் தந்து, வேறொரு அரசன் சிம்ஹாஸனத்துக்கு வரும்படியும் செய்து பெரிய ராஜ்யப் புரட்சிகளை யுண்டாக்கியும் இருக்கிறார்கள். ஒரு குடும்பத்தில் ஒண்டியிருந்து கொள்வதற்கு மிகு ஏழைகளாய் அண்டி நெருங்கித் தங்கினவர்கள் பிறகு அந்தக் குடும்பத்தின் சகல அந்தரங்க விஷயங்களையும் அறிந்து கொண்டு அந்தக் குடும்பத்தாரையே இகழ்ந்துபேசித் தங்களை உயர்த்திக்கொண்டு, பிறகு ஒரு காலத்தில் அந்தக் குடும்பத் தலைவனையே வீட்டை விட்டுத் துரத்தி யாவற்றையும் தங்களுக்குச் சுவாதீனப்படுத்திக்கொண்டு மிருக்கிறார்கள். நம்மை அண்டி நிற்போர் நமக்குத்துணைவராகவும் ஆகலாம்; அவர்களே பிற்கால மொன்றில் நமது கழுத்தைப் பிசைந்து கொல்லுவோராகவும் ஆகலாம்.

ஃ

எனவே, பிறரைத் தாழ்த்தித் தங்களை உயர்த்திக்கொள்வோர் தாங்கள் மேன்மேலும் விருத்தி யடையாமற்போவது ஒரு புறமிருக்க, தங்களின்கபட நினைவால் மற்றவர்க்குக் கொடியவர்களாயும், தீயது செய்வோராகவும் ஆகி விடுவதால், இத்தகையோருடைய சகவாசத்தைப் பெற்றவர்கள் விஷ நாகங்களுடனும், நெருப்புடனும் பழகுவது போலவே கருதி, தங்களது தொழிலின்—குடும்பத்தின்—காரியங்களின் மர்மங்களைக் கூடியவரையில் வெளிவிடாமலே ஜாக்கிரதையாக நடந்துகொள்ள வேண்டியவர்களாயிருக்

கிறார்கள். மேலும், இத்தகையோரிடம் ஒரு முறை பகைத்துப் பிரிந்த பின்பு மறுபடியும் அவர்களுடன் கூட்டுறவு கொள்ள நேரும் போது, பழைய பகைத்த ஸம்பவங்களை மறவாமல்—பெரிய நரிக் குட்டிகள்—என்ற எச்சரிக்கையுடனும் நிதானத்துடனும் நடந்து கொள்ளவேண்டும். பொதுவாக, அதிக புத்திகூர்மையுள்ளவர் களிடத்திலும், நமது விஷயங்களைத் தந்திரமாய் அறிந்து கொள்ள நாடுவோரிடத்திலும்,—அவர்கள் நன்மையைவிடத் தீமையையே அதிகமாகச் செய்வோர்களாக இருப்பதனால்,—நமது விஷயங்களை எவ்வளவுக்கு மூடி மறைத்து நடக்கிறோமோ அவ்வளவுக்கும் நம் மைக் காப்பாற்றிக் கொண்டவர்களாவோம். நமது காரியங்களை யும், தொழில் மர்மங்களையும் மற்றவர்கள் எதுவரையும் அறியா திருக்கிறார்களோ அவ்வளவுக்கும் நம்மைத் தாழ்த்திப்பேசமுடி யாதவர்களாகவே இருப்பார்களென்பதையும் நாம் உணர்ந்து கொள்ளக்கடவோம். நாம் பிறரை நம்பித் தவறிப்போகும் அறி வீனத்திலேயே எல்லாப் பிழைகளுமிருக்கின்றன. தாழ்த்திப் பேசு வோர் திருந்துங்காலமும் உண்டா? அது எப்போதோ!

## என் அம்மை

இன்புருவே, என்னருமை அம்மா!
அன்பிலுனை யார்நிகர்ப்பர் அம்மா!

பெற்ற மனம் பித்தெனவே அம்மா!
உற்றதுயர் யாரறிவார் அம்மா!

தங்கமது நின்குணங்கள் அம்மா!
எங்ஙனமே நான் மறப்பேன் அம்மா!

ஆயிரம்பேர் அருகிருந்தும் அம்மா!
நீயிருத்தற் கிணையாமோ அம்மா!

தெய்வமென நினைந்திருப்பேன் அம்மா!
உய்வகை நீ உணர்த்திடுவாய் அம்மா!

அன்னை அமராவதியே அம்மா!
உன்னை இனிக் காணுவனோ அம்மா!

—நாதமுனி

# 'ஜாதி' என்பதென்ன?

## ஸ்ரீ ரவீந்திரநாத் தாகூரின் பொன்மொழிகள்.



ஜாதியானது ஜனத்தை அழிக்கிறது. மனுஷ்யப் பொதுஜன உத்தம லக்ஷ்யங்களை பாவச்செய்தல் முக்கியமில்லையென்ற எண்ணத்தை ஜாதி கொள்ளுகிறது. அந்த எண்ணத்திலே, ஜாதியானது தன் சக்தியைக் காட்டிப் பெருக்குவதாகிய கல்நெஞ்ச ஸம்பிரதாயத்தில் பலமடைகிறது.

ஃ

மனுஷ்யஜாதி உயிருடனிருக்குமிடத்தே லக்ஷ்யங்களை, உத்தம தர்மங்களைப் பின்பற்றுகிறது. அந்த ஜாதி செத்த கட்டுப்பாடாகி விடும்போது பிரதான லக்ஷ்யங்களுக்கு இடம் கொடுப்பதில்லை.

ஃ

ஜனங்களுடைய பொதுவான தொழிலாளித்தனத்துக்கு ஜாதி யென்று பெயர். அந்த ஜாதியானது ஜனங்களுக்குப் பெரிய விபத்தாகிக் கொண்டு வருகிறது. ஏனெனில், ஜாதி என்ற பேச்சிலே மிகுந்த லாபமுண்டாகிறது. எனவே, ("லாபம்" கெட்டுவிடக்கூடிய) உயர்ந்த லக்ஷ்யங்களிலே மனிதருக்குப் பொறுமையில்லாது போகிறது. லாபம் எவ்வளவு அதிகமாகிறதோ அவ்வளவுக்கு சொந்தப் பிரயோஜனம், பொறாமை, விரோதம், இவற்றினால் நேரும் துன்பங்கள் பலமடைகின்றன. இவை மனிதர்களின் மனதில் "லாபத்தால்" விளைகின்றவை. (உதாரணமாக, வைதிகர்கள் தாங்கள் உயர்ந்த ஜாதி என்று சொல்லிக்கொள்வதின் மூலம் அடைகிற "லாப"த்தை இழந்துவிட மனமில்லாமல் தேசோபகாரமான புதுத் திருத்தங்களை ஆதரிக்க மறுக்கிறார்கள்.)

ஃ

ஜனங்கள் தங்களுடைய மனதில் எங்கும் பயமும், ஸ்வஜாதி கர்வமும், பிறஜாதிகளிடம் விரோதமும் வளர்த்தல் கடமையென்று நினைக்கிறார்கள். பத்திரிகைகளையும், பள்ளிக்கூடப் புஸ்தகங்களையும், கோயில் ஆராதனைகளையுங்கூட இந்த நோக்கத்துக்குப் பயன்படுத்துகிறார்கள். தெய்வ விரோதமான இந்தக் குருட்டுக் கொள்கையைத் தைரியத்துடன் எதிர்த்துப் பேசுவோரை நியாய ஸ்தலங்களில் தண்டிக்கிறார்கள். அல்லது, கூட்டத்திலிருந்து விலக்குகிறார்கள். ஃ

மனித சரித்திரத்தின் இந்த சாசுவதமற்றதான (ஜாதி) குணத்தை விருத்திசெய்யும் பொருட்டு பிடிவாதமான வேலை செய்வோர் இனி வரப்போகிற உண்மையான விடுதலைக் காலத்துக்குத் தகுதியில்லாது போவார்கள். ஃ

ஸமூஹத்து மனுஷ்யனுடைய உத்தம லக்ஷ்யம் பிறர் நலத்தை நாடு

---

அனுக்கிரக சக்தி சிலருக்கே யுண்டு. எல்லோருக்கும் அது அமைவதில்லை.

வதாகும். ஆனால், ஜாதி என்பதோ தொழிலாளித்தனம் உடையதாகையால் அதற்குத் தக்கபடியே மனுஷ்யனின் உத்தம லக்ஷ்யமானது தன் நலத்தையே நாடுவதாய் விடுகிறது.

ஃ

ஜாதிகள் தாம் பிறமனிதரை யதேஷ்டமாகக் கொன்று முடித்தது பற்றி ஆலயங்களில் விசேஷம் கொண்டாடுகின்றன.

ஃ

தர்மவிதியைப் புறக்கணிக்கும் புத்தியை (ஜாதியானது) மனிதருக்கு அவசரமாக விளைவிக்கிறது. ஏனெனில், ஜனமானது தர்மவிதியைத் தெய்வீகமாக எண்ணுகிறது; ஜாதியோ அந்த விதியைக் காற்றிலே தூற்றி விடுகிறதோடு, ஜனத்தின் க்ஷேமத்தைக் காட்டிலும் ஜாதியே பெரிதென்ற கொள்கையைப் பலவிதமான தந்திரங்களால் ஜனங்களுக்குக் கற்பித்து வைக்கவும் முயலுகிறது.



## பிராப்தத்தின் அமைப்பு.

வாழ்க்கை என்பது காதலனும் காதலியும் கருத்து ஒருமித்து மனமொத்து நடத்தும் இல்வாழ்க்கையாகும். இல்வாழ்வைப்போல் எளிய வாழ்வு யாண்டும் இல்லை, யாதுமில்லை. இதுவே மாந்தரின் அறிவையும் ஒழுக்கத்தையும் பண்படுத்துகிறது. உலகில் பணம் படைத்தோர் பலர் இருக்கலாம். அன்னோர் அரண்மனைபோன்ற அழகிய மாளிகைகளில் வசிக்கலாம். ஆடைகளாலும் ஆபரணங்களாலும் அழகாய் விளங்கலாம். அருமையான வாகனங்களில் அங்குமிங்கும் உலாவிவரலாம். ஆனால், இவைகளினாலெல்லாம் அவர்கள் வாழ்வு நல்வாழ்வென்று செப்பிவிட இயலாதபடி துயரமிருக்கலாம். கதிரவன் குடிபுகும் நனைசுவர்க் கூரைக் குடிசைகளில் வசிக்கும் ஏழையர் வறுமையாலும் வாடலாம். ஆடையின்றியும் அல்லற்படலாம். ஆனால், அவர்கள் வாழ்க்கை மனோகரமாகவே இருக்கலாம், அவர்கள் இதயத்தில் பரஸ்பர அன்பும் நற்குணங்களும் நிறைந்து ஆனந்தபரவசமடையலாம். யாவும் அவரவர் ஒழுக்கத்தின்—— பிராப்தத்தின் அமைப்பாகும். R. A. ஸ்வாமி நாயுடு.

கல்வியானது நல்ல பிரஜைகளை உற்பத்தி செய்யவேண்டும். அவ்விதம் செய்கிறதா?




## தமயந்தியின் பிரலாபம்.

தேர்ப்பாகனுக உருமாறி வந்த நளனைக்கண்டு தமயந்தி பிரலாபிக்கின்றாள்.

அன்ற(ன்)ன முறைத்த வும்மழகினை நினைந்தன்பு
கொண்டே னதற்கழுவெனோ?
அமரர்கட மாளாகி யவர்தார மாகென
வழைத்தீ ரதற்கழுவெனோ?
சென்றுமது திருநகர மதனிலென்னை யாண்டுய்த்த
சீர்மையை நினைந்தழுவெனோ?
சேனைபரி வாரமொ டனைத்தையு மிழந்தவொரு
செய்தியை நினைந்தழுவெனோ?
குன்றவுயிர் குழறமொழி குதலைமொழி மகலைபிரி
குறையதற் கின்றழுவெனோ?
குடிகேட னரசனொரு நொடியே மவனுறைதல்
கூடாதெனற் கழுவெனோ?
என்றுயர மதைநீரு மன்றாசறி யாமலென்னை
ஏகென் றதற்கழுவெனோ?
எதிலரை மணாம திருவர்தம துடையுமன்
றேகமாச் சென்றதற்கழுவெனோ?

ஃ

வனமதி லுமைப்பிரிந் தெனதுயிர் துடிக்கவே
வாடினதை யெணியழுவெனோ?
வஞ்சவுர கத்தினுறு வாயினிற் சிக்குண்ட
வாதையினை யெணியழுவெனோ?
உனதாணை கடவாத வனவேட னுலெனக்
குற்றதை நினைந்தழுவெனோ?
உறவின ரகத்துநா ளூழியப் பெண்ணென
வுறைந்ததை நினைந்தழுவெனோ?
மனமது துடிக்கவே மனையிலென்னை வைத்தழும்
மாதாவை யெணியழுவெனோ?
மாநிலமு மவமென மனத்தன்பு குடிகொண்ட
மாதந் தையர்க்கழுவெனோ?
புனர் விவாகம்புரிய வேண்டுமென வெளியிட்ட
பொய்யுரை யதற்கழுவெனோ?
புதியவுரு வோடுமைப் போற்றவே சேரிட்ட
பொல்லா வினைக்கழுவெனோ?

என்று பிரலாபித்துத் தமயந்தி நளனை வணங்குகின்றாள். காலகதியாற் பிரிந்தவர்கள் மீண்டும் கூடுகின்றனர்.

பி. ஏ. பிரணதார்த்திஹரசிவனார் பி. ஏ, எல். டி. (தமயந்தி.)




# இராஜசந்திரன்



(436-ம் பக்கத் தொடர்ச்சி.)

## XV.

பொன்னுசாமி உடனே அச்சாபீஸுக்குச் சென்று நோட்டீசுகளை யெல்லாம் அச்சிட்டுப் பிரசுரப்படுத்தி விட்டதுமன்றி பெரிய நோட்டீசுகளை அச்சிட்டு, "லாயர் கண்ணப்பனைத் தெரிந்தெடுங்கள்" என்று ஒட்டப் பட்டிருந்த இடத்திலெல்லாம் அதன் பக்கத்திலேயே பலவித மைகளுடன் கூடிய தனது பெரிய நோட்டீசுகளை அதிக ஆடம்பரமாய் ஒட்டவைத்து விட்டதுமன்றி, அவ்வூரிலுள்ளோரிடமெல்லாம் சென்று தனக்கு ஓட் கொடுக்கும்படி பல்லைக்காட்டிக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டான். இவ்விஷயத்தில் இவன் பணம் செலவழிக்கப் பின் வாங்கவேயில்லை. தனது இரண்டு மாடி வீடுகளையும் அடகு வைத்து வேண்டிய பணம் பெற்று விட்டான்.

ஃ

இந்த சங்கதி ஊர் முழுதும் பரவி விட்டது. கேவல குண முடைய பொன்னுசாமி கௌரவம் மிகுந்த லாயர் கண்ணப்பனுக்கு எதிரியாக நிற்பதைக் கேட்டு எல்லோரும் ஆச்சரிய மடைந்தார்கள். எதிராஜன் இது சங்கதியை யறிந்ததும்பொன்னுசாமியைக் கண்டு, "என்ன மூடத்தனமான வேலை செய்தாய்? உனக்கு மூளையில்லையா? நீ கண்ணப்பனுக்கு எந்த விதத்தில் சரிசமான மாவாய்? ஏன் வீணாகத் தலைவிரித்தாடப் புறப்பட்டாய்?" என்றான். பொன்னுசாமி மிகவும் கோபமடைந்து "உன் வாயை மூடு, அவன் லாயராயிருந்தால் என்னை என்ன செய்ய முடியும்? அவனுக்கு நான் ஏன் அஞ்சவேண்டும்? அவன் தயவு உனக்கு வேண்டுமானால் நீ அவனிடம் சிநேகம் செய்துகொள், எனக்கு அது அவசியமில்லை" யென்றான். அதற்கு எதிராஜன் "கடவுள் எந்தக் காலத்திலும் துஷ்டர்களுக்கு உதவி செய்தது கிடையாது" என்று கூறிவிட்டுச் சென்றான்.

ஃ

லாயர் கண்ணப்பனுக்கு இவ்விஷயம் தெரிந்தது. தனக்குப் போட்டியாகப் பொன்னுசாமி வந்திருப்பதை யறிந்து புன்னகை கொண்டான். அதற்காக ஆத்திரப்படாமல் எனக்கு சமமான எதிரியல்லாத பொன்னுசாமி எனக்கு எதிரியாக ஏற்பட்டது எனது நன்மைக்கே என்று கூறிக் கொண்டான். இதற்குள்ளாக சீநிவாச முதலியார் அங்கு வந்து, பொன்னுசாமியின் காரியங்களைப் புகன்றார். அவன் எங்கெங்கேயோ கெட்டுக் கிடந்திருந்து . நேற்றைய

தினம் தான் இவ்வூருக்கு வந்தான். அதற்குள்ளாக எப்படியோ நோட்டீசு களை யெல்லாம் அச்சிட்டு விட்டான். எந்த அச்சாபீஸில் பார்த்தாலும் அவன் வேலைகளே வெகு அவசரமாக நடக்கின்றன. அவனும் வண்டியேறிக் கொண்டு ஜம்பமான உடைகளுடன் வீடு வீடாகப் போய் வோட் கேட்கி ருன் என்ருர். அதற்குக் கண்ணப் பன், "பொன்னுசாமியை இனி மீள முடியாதபடி தலையிலடிக்க எனக்குத் தெரியும், அதைக் கடைசியில் பாருங்கள்" என்ருன். ஊர் முழு தும் இந்தப் பிரஸ்தாபமே பெரிய ஆரவாரமாயிருந்தது. மறுநாள் மாலை சுமார் மூன்று மணிக்கு மெம்பரைத் தேர்ந்தெடுப்ப தற்காக சபை கூடிற்று. கணக்கற்ற ஜனங்கள் பெருங் கூட்டமாய்க் கூடி யாருக்கு அந்த ஸ்தானம் கொடுக்கப் படுகிறதோ பார்ப்போம் என்று வந் திருந்தார்கள். குறித்த காலத்தில் கண்ணப்பன் அங்குவந்து சேர்ந்தான். அப்பொழுது அக்கூட்டத்தினரில் அநேகர் "லாயர் கண்ணப்பன் நீடூழி வாழ்க. கண்ணப்பனைத் தேர்ந்தெ டுங்கள்" என்று கத்தினர்கள். "லாயர் கண்ணப்பனைக் கடவுள் காப்பாற்றுவாராக" என்று சிலர் கூவினர்கள். சிலர் கண்ணப்பனுக்குப் பூமாலையிட்டு ஆசிகூறினர். அப்போது உண்டான ஈரகோஷ ஆரவாரத்திற் குக் கணக்கேயில்லை. எங்கு பார்த்தா லும் ஒரே இறைச்சல் சூழ்ந்திருந்தது. இத்தருணத்தில் ஒரு அலங்காரமான வண்டி அங்கு வந்து நின்றது. அதி லிருந்தும் பொன்னுசாமி அழகிய விலையுயர்ந்த ஆடைகள் தரித்துக் கையில் ரவை மோதிரமும், காதில் ரவைக் கடுக்கன்களும் ஜொலிக்க ஒரு கோடீஸ்வரப்பிரபு போலும் இறங்கி னன். இந்த அழகின் கம்பீரத்தைக் கண்பித்து எத்தனைப் பெண்களை மயக்கிக் கற்பழித்துச் சாகடித்துக் குடிகெடுத்துப் பாழ் படுத்தினுயோ பாவி என்று சிலர் பொன்னுசாமி யைத் தூற்றினர்கள். மற்றும் சிலர் கண்டபடி வைதுக் கத்தினர்கள். சிலர் கற்களை வீசி எறிந்தார்கள். பொன்னு சாமி இன்னது செய்வதென்று தெரி யாமல் தன்னுடன் வந்த சிலருடன் ஓர் தனிமையான இடத்தில் உட் கார்ந்துகொண்டான். அங்கு நிறைந் திருந்த ஏராளமான ஜனங்களைக் கண்டதும், இவர்களை யெல்லாம் தனக்கு வோட் கொடுக்கும்படி தான் நியமித்திருக்கிற தாகுக்கார்களான ஏஜண்டுகள் சரிப்படுத்தித் தனக்கு ஜெயத்தை உண்டாக்கி விடுவார்க ளென்று நம்பினன்.

ஃ

கண்ணப்பனுக்கு அருகில் எதிரா ஜனும், அவன் நண்பன் இராமசாமி யும், குமாஸ்தா தனபாலனும் உட்கார்ந் திருந்தார்கள். எதிராஜன் இராமசாமி யைப் பார்த்து, அதோ இருக்கிறனே பொன்னுசாமி, அவன்தான் நமது கண்ணப்பருக்குப் போட்டிஆள் என் ருன். இதைக் கேட்டதும் இராம சாமி திடுக்கிட்டவனுகி, சே, சே, இவ னல்ல பொன்னுசாமி, இவனை எனக்கு நன்ருகத் தெரியுமே, இவ னுடைய பெயர் தங்கவேலு அல் லவா என்ருன். இதைக் கேட்டதும் கண்ணப்பன் அவனை நோக்கி, 'இவன் பெயர் தங்கவேலா, உமக்கு எப்படித் தெரியும்?' என்ருன் அப் போது,

இராமசாமி:—நான் குமாரசாமி முதலியாரின் வீட்டுக்கு எதிரேயுள்ள தோட்டத்தின் சொந்தக்காரன். என் தோட்டம் எப்பொழுதும் அலங்கா மாய்ப் பிறர் கண்களைக் கவரும்படி இருக்கும். இந்தத் தங்கவேலு பிரதி தினமும் மாலையில் ஸைக்கிளில் ஏறி வந்து கொல்லப்பட்டுப்போன குமார

சாமி முதலியாரின் பெண்ணுகிய அபிராமியிடம் வந்துபோவான். என் தோட்டத்திற்கே இவ்விருவரும் வந்து நெடுநேரம் பேசியிருந்து செல்வார்கள். ஒரு தினம் இவனுடைய ஸைக்கிளில் சக்கரத்தில் காற்று இல்லாமற்போக அதை என்னிடம் கொண்டுவந்து சரிப்படுத்திக் கொண்டு சென்றுன் ஒரு அவசர நிமித்தமாக என்னிடம் இருபத்தைந்து ரூபாய் வாங்கிக்கொண்டு அதற்கு ஒரு அணு ஒட்டி ஒரு பிராமிசரி நோட்டாபாண்டும் எழுதிக் கொடுத்திருக்கிறுன். அதில் தங்கவேலு என்று கையெழுத்து செய்திருக்கிறுன். அதற்கு இரண்டு தகுந்த சாக்ஷிகளும் கையெழுத்திட்டிருக்கிறுர்கள். பிரதி தினமும் அபிராமியிடம் வரும்போதெல்லாம் என்னிடமும் பேசியிருந்து செல்வான்.

கண்ணப்பன்:—நீங்கள் இதுவரையில் எங்கே போயிருந்தீர்கள்?

இராமசாமி:—என் குமாரன் தன் மனைவியுடன் இரங்கூனில் வியாபாரம் செய்துகொண்டிருந்தான். திடீரென்று அவன் வியாதிபஸ்தனுகி விடவே, அதற்காக நான் இரங்கூன் சென்று என் குமாரனிடமே பல வருஷங்கள் இருந்துவிட்டேன். இராஜசந்திரன் எனக்கு ஒரு கடிதம் எழுதி, தான் இரங்கூனுக்கு ஓடி வந்து அங்கு இறந்துவிட்டதுபோல ஒரு கடிதம் இந்த ஊர் நியாயாதிபதிக்கு எழுதும்படி ரிஜிஸ்தர் செய்து அனுப்பியிருந்தான். அவனுக்காக இரக்கப்பட்டு அவ்விதமே ரகசியமாய் ஒரு கடிதம் இவ்வூர் நியாயாதிபதிக்கு எழுதிவிட்டேன். அதனுல், இராஜசந்திரன் இறந்துவிட்டதாக எல்லோரும் நம்பிவிட்டார்கள். போலீஸாரும் இராஜசந்திரனைத் தேடுவதை விட்டுவிட்டதாகக் கேள்விப்பட்டேன். இது அந்தரங்கமான விஷயமாதலின் எவருக்கும் வெளியிடவேண்டாம்.

கண்ணப்பன்:—இராஜ சந்திரனுக்குப் பெரிய உபகாரமே செய்திருக்கிறீர்கள். அதை நான் வெளியிடமாட்டேன். இப்போதும் இராஜ சந்திரனுக்கு மற்ளெரு உதவி செய்ய வேண்டும். நீர் பொன்னுசாமியைத் தங்கவேலு என்கிறீ ரல்லவா? அவனிடம் சென்று "தங்கவேலு க்ஷேமமா" என்று அழைத்துப்பேசுக; அதை நான் காதாரக் கேட்கவேண்டும். பொன்னுசாமி தன் பெயரைத் தங்கவேலு என்று கையெழுத்திட்டு உமக்கு எழுதித் தந்த பிராமிஸரி நோட்டையும் எனக்குக் கொடுத்தால் இராஜ சந்திரன் அதன் மூலயாய் விடுதலை யடைந்து விடும்படி நான் வேலை செய்வேன்.

இராமசாமி:—உங்கள் இஷ்டப்படி நடக்கிறேன். இது ஒரு பெரிய காரியமல்ல.

கண்ணப்பன்:—குமாரசாமி முதலியார் கொல்லப்பட்டபோது நீங்கள் இவ்வூரில் இருந்தீர்களா?

இராமசாமி:—ஆகா! நான் அன்று இருந்தேன். அன்று சாயங்காலம் எனது தோட்டத்தில் நானும் தங்கவேலுவும் உட்கார்ந்து ஒருபோட்டோ படமும் பிடித்துக்கொண்டோம். நான் அன்று இரவு எழுமணி வண்டியில் சென்னை சென்று அங்கிருந்து இரங்கூன் போவதாயிருந்ததால் ஞாபகார்த்தமாக அப்படிப் படம் எடுத்துக் கொண்டோம். பொட்டகிராப்பர் அந்தப் படத்தைப் பிறகு இரங்கூனுக்கு எனக்கு அனுப்பினுர்.

கண்ணப்பன்:—படம் பிடித்துக் கொண்ட பிறகு எவ்வளவு நேரம் தங்கவேலு உங்கள் தோட்டத்திலிருந்தான்?

இராமசாமி :—நான் சரியாக மாலை ஆறுமணிக்கு ரயிலுக்குப் புறப்பட்டு விட்டேன். அபிராமியும் தங்கவேலு வும் என்னை வழியனுப்பினார்கள். அதற்குப் பிறகுதான் குமாரசாமி முதலியார் கொல்லப்பட்டதாக வெகு நாட்களுக்குப் பிறகு இரங்கூனில் பத்திரிகைகளில் படித்தறிந்தேன்.

கண்ணப்பன் :—இராஜ சந்திரன் மீது அபிராமிக்குப் பிரியமுண்டா ?

இராமசாமி :—தங்கவேலுவின் அழ கில் மயங்கிய பெண்கள் இன்னொரு ஆடவனைக் கண்ணெடுத்தும் பார்ப் பார்களா? இராஜ சந்திரன் வந்தா லும், தங்கவேலு போகிற வரையில் அபிராமி இராஜ சந்திரனிடம் பேச மாட்டாள்.

கண்ணப்பன் :—சரி, இனி நீங்கள் தங்கவேலுவுடன் பேசுவதை நான் கேட்கவேண்டும். உடனே அவனி டம் செல்லுங்கள்.

ஃ

உடனே இராமசாமி எழுந்து பொன்னுசாமியின் அருகே சென்று, உரத்த சப்தமாய் “தங்கவேலு, சௌக்கியமா ?” என்றான். அப் பொழுது பொன்னுசாமி ஆச்சரிய மடைந்தவனாய், அதிக கோபமான முகத்துடன் யாரைத் தங்கவேலு என்கிறாய் ? என்றான்.

இராமசாமி:—உன்னைத்தான் தங் கவேலு என்று சொல்லுகிறேன். உன் பெயரே உனக்கு மறந்துபோய்விட் டதா? தங்கவேலு என்று கையெழுத் திட்டு எனக்குப் பிராமிஸரி நோட்டு இருபத்தைந்து ரூபாய்க்கு நீ எழுதிக் கொடுத்தது ஞாபகமில்லையா? நான் ஊருக்குப்போகும் தினத்தில் இரு வருமாகப் போட்டோபடம் எடுத்துக் கொள்ளவில்லையா? அந்த சமயத்தில் உன் காதலி அபிராமி அங்கு குறுக் காக வர, அவள் முகமுங்கூட அந்தப் போட்டோ படத்தில் பட்டுவிட் டதே. பழைய சங்கதிகளையே நீ மறந்து போனாயே? நீ இப்பொழுது பொன் னுசாமி என்று எதற்காகப் பெயரை மாற்றி வைத்துக்கொண்டாய்? என் கடன் தொகையை எப்போது கொடுக்கிறாய்? பிராமிஸரி நோட்டு காலாவதியாகி இப்போது செல்லா தென்று சொல்லாதே. இந்தக் கூட் டத்தில் அந்தப் பிராமிஸரி நோட்டை யும் நீயும் நானும் எடுத்துக்கொண்ட படத்தையும் கொண்டுவந்து உறக்கக் கத்திக் கலகம் செய்வேன். என் பணத்தை இப்போதே கொடுத்து விடு. இதுதான் நான் பணம் பெறு கிற வேளை.

பொன்னுசாமி:—ஏன் அப்படி உறக்கப் பேசுகிறாய்? உன் இருபத் தைந்து ரூபாய்க்குப் பதிலாக இந்தா இந்த ஐம்பது ரூபாய் நோட்டைப் பெற்றுக்கொள். என் பழைய பெய ரான தங்கவேலு என்பதை இப்பொ ழுது எவருக்கும் வெளியிடாதே. என் பக்கமாக இருந்து எனக்கு வோட் கிடைக்கும்படி தயவுசெய்து முயற்சி எடுத்துக்கொள்.

என்றுகூறி இராமசாமியிடம் ஐம் பது ரூபாய் நோட்டு ஒன்றைக் கொடுத்தான். இராமசாமி அதைப் பெற்றுக்கொண்டு, நீ அபிராமிக்குத் தங்கவேலு என்று கையெழுத்திட்டு என் விலாசத்திற்கு முன்பு சில கடி தங்கள் அனுப்பினாய். அதை நான் அபிராமிக்குக் கொடுக்கப்போக, அவள் அதை வாசித்துவிட்டு என் னிடமே போட்டுச்சென்றாள். அந்த விதமான கடிதங்கள் ஒரு ஏழெட்டு வரையில் என்னிடம் இருக்கிறது. அவற்றில் உபயோகித்துள்ள பத ஜோடினைகளின் அழகே ஒரு தனி அழகு. (தொடரும்) S. G. R.




## 3. இல்லறம்.

(402-ம்பக்கத் தொடர்ச்சி.)

299. "அழுதுபடி பூச்சியம், ஆடம்பரம் அதிகம்."

ஒரு வீட்டின் உள் நிலை அன்றைய புசிப்புக்கே சிக்கலாயும் வழியற்று மிருப்பினும் வெளி ஆரவாரம் மிகப் பெரிதாகவே இருக்கும். பெண் கொள்வோரும் தருவோரும் வெளிஆடம்பரத்தில் அந்தசமயம் பெருமைப்பட்டவர்களாகவே இருப்பர். எதையும் உள்நுழைந்து ஆராய்ந்துணரவேண்டுமென்றபடி. மேலும், உலகின் போக்கே உள்ளுக்கிருப்பதை மறைத்து நடப்பதாகத்தான் இருக்கிறதென்பதை இப்பழமொழி குறிப்பிடுகின்றது.

300. "அங்காங்கு வைபோகமாயிருக்கிறன்; இங்கே பார்த்தால் அரைக்காசு முதலுமில்லை."

சிலர் வெளியில் மிகு பிரசித்தர்களாய், சென்ற இடமெங்கும் நட்பினர்களைக் கொண்டவர்களாய் பன்னீரிலே ஸ்நானம் செய்வோராய், சோடாவைக் கொண்டு வாய் கொப்பளிப்போராய் வாசனை விசேஷங்களுடன் பரிமளிப்பர். இவர்களை நம்பிக் கடன் கொடுத்துவிட்டு, பிறகு அவர்களின் ஊரும் வீடும் தேடிச்சென்றால் வீடு கூரை வீடாக இருக்கும்; ஊரோ அவர்களின் மோசங்களைத் தெரிவிப்பதாயிருக்கும். கொடுத்த கடனில் ஒருபணம் திரும்புவதற்குக் கூட வழியற்றிருக்கும். இத்தகையோரின் வீட்டுக் குடித்தன வாழ்வும், அவர்களை நம்பிய மனைவி மக்களும் பிற்காலத்தில் எந்த சொத்துங் காணாது திண்டாடவேண்டியவர்களாகவே இருப்பர்.

301. "அசைந்து தின்கிறது மாடு, அசையாமல் தின்கிறது வீடு."

ஒரு வீடு கட்டுவதற்குக் கொட்டிய தொகையையும், அதற்கு வட்டியையும் பார்த்தால் நெஞ்சு திடுக்கிடத்தான் செய்யும், இன்னும் வீடு ஆங்காங்கு நெடுகப் பழுதுபட்டுக்கொண்டே சென்று பிறகு சுவர்களும் இடிந்து விழும்படி அவ்வளவுக்கு நஷ்டத்தையும் தரக்கூடியதுதான். இப்படியெல்லாம் இருந்தாலும் குடித்தனத்திற்கு வீடு முக்கியமான வஸ்து. சொந்த வீடு என்பது மகா பாக்கியமுள்ள சங்கதி. அதற்குச் செலவிட்ட பணம் வீண் போனதாகாது. இவ்விதமே, ஒரு முக்கிய விஷயத்தில் நாம் செலவிடவேண்டி வருவதில், அது வீண் விரயமாய்த் தோற்றினும், அதைச் செய்தாகவேண்டியது நமது கடமையாய் முடிகிறது.

---

மெதுவாக அவன் அந்தப் புஸ்தகத்தை எடுத்துப் பார்க்க நினைக்கிறன். அதை யறிந்த இவன் ஜாடையாக அதை எடுத்து வேறோர் பக்கத்தில் மறைக்க முயல்கிறன். கடைசியில் இருவரும் குள்ள நரிகளே.

302. "அஞ்சுருவுந்தாலி நெஞ்சுருவக் கட்டிக்கொண்டுவந்தவள் போல வலக்காரமாய்ப் பேசுகிறாள்."

எங்கேயோ கிடந்த கரிச்சட்டை எந்த விதமாகவோ வீட்டுக்குள் நுழைந்துகொண்டு, இப்போது எல்லோருக்கும் மேலாக அதிகார ஸ்தானம் ஏற்று வீட்டாரனைவரையும் தன் கைக்குள் அடக்கி ஆரவாரிப்பதைக் காணும் போது, அந்த வீட்டுக்குச் சொந்தக்காரியாய் அந்த வீட்டுக்காரனை மணந்தவளாய் உள்ள பெண் வயிறெரிந்து சொல்லும் பழமொழி இது. சிலர் தங்கட்கு எவ்வித சுதந்திரமுமில்லாத வீட்டில் மெதுவாக நுழைந்துகொண்டு அதிகார பாத்தியம் செலுத்துவதையும், அவர்களுக்கு மற்றவர்கள் உட்பட்டு நடக்கும்படியாகிவிடுவதையும் இந்தப் பழமொழி குறிப்பிடுகிறது. இத்தகையோரை வீட்டு வாசல் ஏறாதபடி பார்ப்பதே வீட்டுக் குடித்தனத்திற்கு க்ஷேமமாகும்.

303. "அடங்காத மனைவியும் ஆங்கார புருஷனும்."

எவ்வளவோ பாடுபட்டு விவாகம் செய்துகொள்வது ஸந்தோஷப்படுவதற்கும், தந்தமக்கும் ஒரு ஜீவதுணை கிடைத்ததென்று தைரியப்படுவதற்காகவுமே. அவ்விதமிருக்க, அடங்காத மனைவியொருத்தி பூர்வஜென்ம பாபத்தின் பயனாக வாய்த்துவிட்டால் எத்தகைய பொறுமையுள்ளோனும் ஆங்கார புருஷனாகவே மாறிவிடும்படிப் பல சமயங்களிலும் நேர்ந்துகொள்கிறது; பிறகு குடித்தனம் தடித்தனமாவதற்குக் கேட்பானேன்? அதை விவரித்தல் துயரப்பெருக்கே.

304. "அம்மாளுக்குத் தமிழ் தெரியாது, ஐயாவுக்கு வடுவு தெரியாது"

இது விவாகம் செய்துகொண்ட அழகு. ஒருவர் அறிந்த பாஷை மற்றவர்க்குத் தெரியாவிடில், அந்த சீர்கேட்டிற்குத் தக்கபடியே அவர்களின் வாழ்க்கையும் இருக்கும். படித்தவர்களுக்குப் படியாத கட்டைகளைச் சேர்த்து மணமுடிக்கும் அறியாமையில் அவர்களின் வாழ்க்கைச் சுவையே கெட்டுவிடுகின்றது. இந்த அலங்கோலங்கள் இந்த நாளிலும் குறைந்தபாடில்லை.

305. "அடி ஓட்டையானாலும் கொழுக்கட்டை வேகவேண்டியது தானே."

கூர்ந்து ஆராயப்புகின், அதது அங்கங்கே ஒரு கோணலாகத்தான் இருக்கும். அவற்றையெல்லாம் மனதில் வைத்துக்கொண்டு வாதனைப்படாமல் மனம் பொறுத்துச் சரிசரியென்று காரியத்தை முடிப்பதிலேயே கண்ணாகிக் காலத்தைக் கடத்திக்கொண்டுபோவதே குடித்தன வாழ்வுக்குக் கௌரவமென்பது இதன் பொருள்.

---

சென்னையில் ஸ்ரீமான் லக்ஷ்மீகாந்தம் என்பவர் ஆங்கிலத் தினசரியான "டெயிலி எக்ஸ்பிரஸ்" பத்திரிகையைத் தாமே வாங்கிக்கொள்ள நினைத்த ஆசையானது, கடைசியில் அவரைப் பணத்திற்குக் கோணல் வழியிற் போகச் செய்து ஏழு வருஷ கடின சிக்ஷையையும் தேடிக்கொடுத்துவிட்டது. பத்திரிகை ஆசை ஒரு பொல்லாத ஆசைதான். பத்திரிகை என்பது ஏராளச் செலவில் சமாளிக்கவேண்டிய பெரிய காரியம்.

# மஹா விகடோபதேசம்.

சிஷ்யன்:—தன் மனைவியோ, பந்துவோ, நண்பனோ தன்னை வெகு பிரியமாய் உபசரித்து உண்ணச்செய்யும்போது நாம் அந்த அன்பை எப்படி நினைக்கவேண்டும்?

குரு:—அந்த உபசாரத்தைப் பார்த்து நாம் தலை துள்ளிப் போய்விடக்கூடாது. அதற்கு முன்பு ஒரு தடவை நாம் தின்றாலும் சரி, தின்னமற் தொலைந்தாலும் சரி என்று இலையில் சாதத்தையும் குழம்பையும் கொட்டி அடுத்த வீட்டுக்கோ, அல்லது வேறு வேலையாகவோ போய்விட்ட அலக்ஷியத் தன்மையையும், மூர்க்க குணத்தையும் இன்றைய இந்தப் பிரியமான உபசரிப்பின்போது நினைத்துப் பார்த்துக்கொண்டு, இந்த அன்பான உபசரிப்பு எத்தனை நிமிஷம் நாள்களுக்கு நிலைக்கப்போகின்றதென்றும் மனதில் எண்ணிக் கொண்டுவிடுவாயானல், இன்று உபசரிப்பில் மயங்கிவிடமாட்டாய். இப்படி உபசரித்ததும் ஒரு காரியத்திற்காகவே என்று இதற்கு முன் நீ அறிந்துகொண்டவைகளையும் இப்போது உன் ஞாபகத்திற்குக் கொண்டு வா.

சிஷ்யன்:—ஒரு ஊரில் இறங்கி அங்கு ஒருவரைச் சந்திக்கப் போகும் போது ஒரு மோட்டாரில் ஏறிச் சென்று அவரைக் கண்டால் அதிக கௌரவமா யிருக்குமல்லவா?

குரு:—மூடத்தனத்திலே முற்றிய மூடத்தனம் எதுவென்றால், காலணு செலவிடவேண்டிய இடத்தில் ஒரு அணு செலவு செய்வதுதான். வாடகைமோட்டாருக்கு மதிப்பில்லை. சொந்தத்தில் மோட்டாருள்ளவன் அதற்கான பவிசியையும் பெற்று சமாளிப்பவனுக இருந்தால்தான் ஊரார் மதிப்பார்கள். அவ்விதமின்றி பிச்சாண்டிச் சம்பளம் பெறுகிற ஒருவன் தான்போன ஊரில் ஒரு மோட்டாரை வாடகைக்குப்பேசி டம்பமாய் ஒருவரைக் காணச்சென்றால், அந்த நிமிஷத்திற்குமட்டும் முகத்திற்கெதிரே வெகு மதிப்பும் உபசரிப்பும் கொடுத்து வரவேற்பார்கள். அவன் மோட்டார் ஏறிப்போன பிறகோ, பிச்சைக்காரப் பையல், டம்பாச்சாரித்தனமான செலவு செய்கிறான், இவன் உருப்படுவதெங்கே? ஒரு மாட்டு வண்டி, குதிரைவண்டி பேசிக் கொண்டுவந்து போகிறதுதானே, ஏன் இந்த வீண் டம்பச்செலவு என்று திட்டிக் குத்திப் பழித்துக் காட்டுவார்கள். போனவன் திரும்பி வந்து ஒரு அவசரத்துக்கு இரண்டு ரூபாய் கேட்டாலும், இந்த டம்பாசாரிக்குத் தந்தால் திரும்பிவருமோ என்னவோ என்று பின்னடைந்து வெகு உருக்கமாய், அடடா! இந்த சமயம் கையில் இல்லிங்களே, இப்போததானே இன்னொருவர் வாங்கிப்போனர் என்று பசப்பி வெறுங் கையை நீட்டி அனுப்பிவிடுவார்கள். கடைசியாக ஒரு சங்கதி. பிறர் மதிப்பும் துதிப்பும் தன் நடத்தையிலும் உழைப்பிலும் நாணயத்திலும் நற்குணத்திலும் இருக்கிறதே தவிர, இந்த மோட்டார் டம்பங்களாலில்லை. மேலும், உளவு கண்டுவரச் செல்பவன் கால்நடை வேஷத்தில் போய் வருவதே சாமர்த்தியமாம்.

சிஷ்யன்:—சிலர் ஒல்லியாய் எலும்பும் தோலுமாகக் கிடந்து, விவாகத்

---

உன் நெஞ்சிலிருக்கிற எந்தெந்த சங்கதி எதிர் மனுஷ்யனுக்குத் தெரியாதென்று நினைக்கிறாயோ—அதைத் தான் அந்த எதிர் மனுஷ்யன் நன்றாக அறிந்துகொண்டு விடுகின்றான்.

திற்குப் பிறகு யானையைப்போல் உப்பிப்போகிறார்களே! அது எப்படி ?

குரு:—அது பாலும் வெண்ணெயும் தின்று உப்புவதல்ல. வந்த பெண்மணி புருஷனுடைய க்ஷேமத்தை அவ்வளவு அக்கரையாகக் கவனிப்பவளாயிருந்து அவனுக்கு யாதொரு கவலையும் வைக்காதவளாய் நன்றாக ஊட்டி உண்பித்து நல்ல சுகந்தருபவளாய் இருந்திருக்கவேண்டும். அந்த ஸந்தோஷத்தில் புது மாப்பிள்ளைகள் அப்படிப் பெருத்து உலக்கைபோனிருந்தோர் உரல்போலாகி விடுகிறார்கள். சிலருக்கு எட்டிக்குப்போட்டியான பெண்கட்டைகள் வாய்த்துவிடுவதில் கல்யாணத்திற்குப் பிறகு அவர்களின் கண்கள் ஆழமாகக் குழிபட்டுப்போய்த் தேகமும் இளைத்து எலும்புக் கூடாகிறார்கள். எல்லாம் அவரவர்களுக்குக் கிடைக்கிற சுகதுக்கங்கட்குத் தக்கபடி அவர்கள் மேனியும் இருக்கும். பெற்றோர்களின் சரீர சாயலை அனுசரித்து அம்மாதிரி உப்பிப்போக நேர்வதும் உண்டு.

சிஷ்யன்:—யோக்கியதை யற்ற நாணயத்தவறுள்ள மனிதர்களுடனும் பலர் பழகுகிறார்களே. அவர்களுக்கும் சிநேகக்கூட்டம் கிடைக்கிறதே. அது எப்படி ?

குரு:—அவர்களும் அவர்களைப் போன்ற குணத்தினராகவே இருக்கலாம். சில உத்தமர்கள் பழய அன்பை எண்ணி யோக்கியதைக் குறைவுடையவர்களுடன் குலாவுகிறதுண்டுதான். ஆனால், ஒரு காசுக்கும் அவர்களை நம்பமாட்டார்கள். ஒன்றுக்கு விலை கொடுத்துப் பெறுவதாகச் சொல்லிக் கேட்டாலும், அந்த சாமான் இல்லையென்றும் செலவாய்விட்டதென்றும் சொல்லிவிடுவார்கள். ஏனெனில், அவர்கள் விலை கொடுப்பதாகச் சொல்லுவதெல்லாம் வெறும் வாய்ப் பிரசங்கமே யென்றும், காசு கொடுத்து அவர்கள் வாங்கப்போவதில்லையென்றும் இவர்களுக்குத் தெரியும். ஆகவே, எதிலும் பட்டுக்கொள்ளாமலே, மேலுக்கு உபசாரமாய்ப் பேசி அவ்வளவுடன் ஒதுங்கிவிடுவார்கள். அந்த யோக்கியதை யற்றோரும் இந்த ஜாடை தெரிந்துகொண்டு தங்கள் வாலைச் சுருட்டிக்கொள்வார்கள். யோக்கியதை யற்றவன் அவசரமாய் வரும்படி தந்தியே அனுப்பினாலும் கூட அதற்கு ஒரு தபால்கார்டுக்குள்ள மதிப்பு வைப்பதுகூட அபூர்வம்தான். தந்தியும் ஒரு மூலையில் எறியப்படும். என்ன கபடத்துடன் தந்தி யனுப்பியதோவென்று சந்தேகப்பட்டு யோசிக்கவும் வைக்கும்.

சிஷ்யன்:—சிலருக்குப் பத்து கடிதங்கள் எழுதினாலும் பதில் எழுதுகிறதில்லை. ஆனால், அவர்களிடம் நேரில் போனாலோ வெகு பிரியமாய்ப் பேசுகிறார்கள். இதென்ன மயக்கோ கபடமோ ?

குரு:—மயக்கும் கபடமும் அல்ல அப்பனே! அவர்கள் எதிலாவது ஒன்றில் அந்த எதிர் மனுஷனிடம் ஒரு குறை கண்டு இப்படித்தான் இந்த மனுஷ்யன் நெடுகவும் இருப்பான் என்று எண்ணியவர்களாய் அதிர்ப்தி பட்டுப்போய் இருக்கலாம். அதற்குப் பிறகு அவர்களுடன் பழக மனமற்றுப்போய் இருக்கலாம். அந்த வகையிலிருப்போருக்குப் பல கடிதங்கள் வந்தாலும் பதில்தரச் சிந்தையோடாமல்

---

பெண் கல்வியின் விருத்தியைப்பற்றி ஓயாது பிரசங்கங்கள் நடக்கிறதே தவிர, அவர்களுக்கு வேண்டிய குடித்தனக் கல்விக்குத் தேவையான புஸ்தகம் எதுவும் பாடசாலைப் பாடங்களுடன் சேர்க்கப்பட்டிருக்கக் காணோமே! வெறும்பேச்சில் என்ன லாபம்! வெறுங்கை முழம் போடுமா ?

இருந்துவிடுவதும் உண்டுதான். சிலர் ஒருவனுடைய பிழைப்பின் ரகசியங்களை மெதுவாக அறிந்துகொண்டு அவன் வாயில் மண்ணைப்போடுவதற்கேற்ற தந்திரசாலிகளாகவும் இருக்கலாம். அவர்களுடன் நெருங்குவதற்குப் பயந்து விலகி, அதனாலும் பதில் கடிதம் எழுதாமற் போகலாம். சிலர் தபால் செலவு கஷ்டங்களை யோசித்தும் எழுதாதிருக்கலாம். இன்னும் சிலர் ஒரு குறித்த மனிதனுடைய சகவாசமே வேண்டாமென்று வெறுத்தும், வேறு சிலர் பழய நட்பையே மறந்தும், இன்னும் சிலர் அவனால் தங்கட்கு ஒரு பிரயோஜனமும் இல்லையென்றெண்ணி ஒதுங்கிப்போயும், மற்றும் சிலர் தங்களுடைய வேண்டுதலை ஒரு காலத்தில் அலக்ஷியம் செய்துவிட்டும் தாங்கள் அழைத்த விசேஷத்திற்கு வாராமலே போயும விட்டதை எண்ணியும் இப்படியாகப் பல காரணங்களாலும் பதில் கடிதம் தாராமற்போகலாம். முக்கியமான மனிதன் தனக்குக் கடிதம் எழுதி ஒரு வேலையைச் செய்யச் சொல்லாமல் இடையிலிருக்கிற மூன்றாவது மனிதன் அந்த வேலையைச் செய்யும்படி வேண்டும்போது, அந்த முக்கிய மனிதன் தன்னை வேண்டவில்லையே, இந்த மூன்றாவது மனிதனல்லவா வேண்டுகிறான், என்று குறைவுபட்டுக்கொண்டு அதனாலும் பதில் தராமற் போகலாம். சிலர் வெட்டி விஷயங்கட்கு ஓயாது கடிதம் எழுதப்போக, அதற்கு பதில் தர மனமற்றுப் போவதும் உண்டு. ஒருவனுக்குப் பணம் தான் பாக்கித் தரவேண்டியதிருக்க, அந்த ஒருவன் அதற்காகப் பல கடிதங்கள் எழுதப்போக, அதற்குத் தான் பதில் எழுதினால், அது தான் பணப் பாக்கியாயிருப்பதற்கு ஒரு தஸ்தாவேஜிக் கடிதமாய் விடுமென்று அதற்குப் பதில் தாராமலே இருந்துவிடலாம், இன்னும் சில கள்ளப் பூனைகள் அந்தப் பண விஷயப் பேச்சை விட்டு விட்டு வேறு சங்கதிகளால் கடிதத்தை நிரப்பி யனுப்பிவிடுவதும் உண்டு. காகிதம் எழுதாமற் போவதற்கு எத்தனையோ காரணங்களில் இரண்டொன்றையே இங்கு கூறினேன். மற்றவைகளை நீயே உலகிற் பழகித் தெரிந்துகொள். கடைசியாக இன்னொன்றும் குறிப்பிடுகின்றேன். அன்பு வைத்துப் பிறகு அந்த அன்பை மறந்துபோனவர்கள்தான் கடிதம் எழுதுவதில்லையென்றால், உண்மையாகவே உயிருக்குயிராக இருப்பவர்களுங்கூடக் கடிதம் எழுதாதிருப்பது ஒரு ஆச்சரியமல்லவா? அதற்குப் பல காரணங்களில் ஒரு காரணத்தைமட்டும் இப்போது கேள். ஒருவன் தன் அக்காவைப் பார்க்க வேண்டி அளவகடந்த ஆவலோடும் வீடு தேடி ஓடுகிறான். அந்த வேளையில் அக்காவின் வீடு பூட்டப்பெற்று அக்கா குடும்ப சகிதமாய் எங்கோ போயிருப்பதைக் கண்டு ஏமாறித் தன் ஊர் திரும்புகிறான். பிறகு அக்காவிடமிருந்து இவனுக்கு வீட்டிலில்லாமற் போனதற்கு வருந்தி ஒரு கடிதம் வருகிறது. இவன் கடிதத்தை விரும்பாமல் அக்காவின் திருமுக தரிசனங் காணவே ஆவலாதி கொள்கிறான். எப்போது பார்க்க வாய்க்குமோ என்று ஏங்கி, வந்த கடிதத்திற்கு உபசாரப் பதில் தர விரும்பாமல் பிறகு எழுதலாமென்றிருந்து விடுகிறான். இதில் நாட்களும் பல ஆகிவிடுகின்றன. அன்பு முற்றிய பெருமரங்கள் கடிதங்களாகிய ஜலத்தை விரும்பாமல், நேரில் சந்தித்தலாகிய மழைமுகம் காணவே நாடுவதில் கடிதத்திற்கு அவ்வளவு அதிக மதிப்பில்லாது போகிறது. ஆகவே வெகுநாட் கழித்துப் பாதி மனதோடும், பிரிவாற்றாமையோடும் பதில் தர நேர்கிறது.

---

# ஸர் ஐஸாக் நியூட்டன்.

(424-ம் பக்கத் தொடர்ச்சி.)



நியூடனின் மனப்போக்கைக் கண்ட அவருடைய தாய் தன் குமாரனுடைய விருப்பத்தின்படியே படிப்பில் புத்தியைச் செலுத்தட்டுமென்று முன்பு வாசித்துக்கொண்டிருந்த கிராந்தன் பாடசாலைக்கே அவரை அனுப்பிவைத்தாள். அங்கு வாசித்துக்கொண்டிருந்த நியூடன் தனது சிறிய தந்தையின் முயற்சியால் 1661-ம் வருஷம் கேம்பிரிட்ஜ் நகர வித்தியாசாலையில் சேர்ந்துகொண்டார். அதன் பின் நியூடன் சந்திரனைச் சுற்றியிருக்கிற பளபளப்பான இரண்டு வட்டங்களைப் பரிசோதித்தறிந்தார்; கண்ணாடிகளைத் தூரதிருஷ்டிக்கு உபயோகமாகும்படித் தீட்டினார்; ஒளி, நிறம் இவைகளுடைய தன்மையைக் கண்டறிவதற்கு உபயோகமான பல பரிசோதனைகளையும் செய்தார். வாசிப்பு ஒருபக்கம் நடக்க, அவரது ஆராய்ச்சி தனக்குத்தானே மற்றொரு பக்கம் நடந்தவாறிருந்தது.

ஃ

கேம்பிரிட்ஜ் நகரில் மிகக்கொடிய கொள்ளைநோய் தோன்றவே, உடனே தமது சொந்த ஊருக்குத் திரும்பி வந்தார். அங்கும் முயற்சி யில்லாமலிருக்கவில்லை. எந்த வஸ்துவும் பூமியில் வந்து விழவேண்டிய காரணமென்னவென்று ஆலோசிக்கத் தொடங்கினார். அப்படி ஓயாது சிந்தித்துக்கொண்டே ஒருநாள் அவர் ஒரு தோட்டத்தில் உட்கார்ந்துகொண்டிருக்கையில், ஒரு மரத்திலிருந்து *நாவற்பழம் ஒன்று கீழே விழ, அதைப் பார்த்தவுடனே எந்த நியாயத்தால் இப்பழம் மரத்தின்மேலிருந்து பூமியில் வந்து விழுந்ததோ, அதே நியாயத்தால் ஆகாயத்திலுள்ள கிரகங்கள்கூடப் பூமியில் வந்து விழவேண்டும் என்கிற கருத்து அவர் மனதில் தோன்றிற்றாம். அதையே காரணமாகக்கொண்டு அவர் ஆகர்ஷண சக்தி அதாவது இழுப்புக் கவர்ச்சியைப்பற்றிச் சிறந்த புஸ்தகமொன்று எழுதினார். அந்தப் புஸ்தகத்தின் அருமையைப் பார்த்து பிரான்சு தேசத்துச் சோதிட சாஸ்திரி யொருவர் இப்படிப்பட்ட அருமையிலும் அருமையான புஸ்தகம் எழுதுகிறவர் உலகில் இவர் தவிர, வேறொருவர் உண்டோவென்று சொல்லி அதிசயித்தார்.

ஃ

நியூடனுக்கு ரஸாயன சாஸ்திரத்தில் விருப்பம் அதிகம். அதனால் அவர், உறையுந்தருணமான நீரிலுள்ள சூடு முதற்கொண்டு எரிகிற தணலிலுள்ள சூடு வரையிலுமுள்ள சூடுகளுக்கு உண்டான பேதங்களையெல்லாம் வரிசையாகக் கண்டு எழுதினார். அக்கினி, அக்கினிச்சுவாலை

* மரத்திலிருந்து விழுந்தது இலந்தைப் பழமா, நாவற் பழமா என்பது தெரியவில்லை. இரு நூல்களில் இருவிதமாயுள்ளன.

இவைகளுடைய தன்மையைப்பற்றியும் ஒரு ஸஞ்சிகை எழுதினர். ஆரதிருஷ்டிக்கு உபயோகமான கருவிகளையும் விருத்தி பண்ணினர். இப்படியே இன்னும் பல காரியங்களையும் செய்தார். அவர் ஒரு நிமிஷங்கூட ஒன்றும் செய்யாமல் இருந்ததில்லை. அவர் மனமோ எப்போதும் ஆலோசனையிலேயே மூழ்கிக் கிடக்கும். அதனால் அவருக்கு ஒன்றின்மேல் ஒன்றாய்ப் பல பிரசித்திகளுண்டாகிக் கடைசியில் "ஸர் ஐஸாக் நியூட்டன்" என்கிற பட்டப்பெயர் கிடைத்தது.

ஃ

அவர் தன்னுடைய வாழ்நாளிலே மூக்குக்கண்ணாடி ஒரு நாள்கூடத் தரித்துக்கொண்டதில்லை. அவ்வளவு காலத்தில் அவருக்கு ஒரு பல்லுதான் விழுந்ததாம். அவர் பார்வைக்குக் குட்டை வடிவமாயும், எப்போதும் சிந்தித்த பாவனையாயும் இருப்பார். அவருடைய தலைமயிர்கள் வெளேலென்று வெளுத்திருக்கும். எதிரே ஏதாவது ஒரு புஸ்தகமும், கையிலே பேறுவுமில்லாமல் அவர் ஒரு நிமிஷமுங்கூட இரார். வேலையில் வெகு கருத்தும், நடத்தையில் அதிக கம்பீரமும் உடையவர். ஏழைகளிடத்தில் அவருக்குப் பக்ஷம் அதிகம். அவர் ஒரு நாளாவது கூட்டங்களிற் சேர்ந்து வீண்பேச்சுபேசி வம்பளந்ததில்லை. எப்போதும் ஏதாவது ஒரு நன்மையைக் கோரி ஒரு காரியம் செய்து கொண்டேயிருப்பார். இவ்வளவிருந்தும்; அவர் தன்னுடைய பெருமையை ஒரு பெருமையாக நினைப்பதில்லை.

ஃ

இப்படிச் சிறந்த விஷயங்களைக் கண்டுபிடிக்கும்படியான வல்லமை உங்களுக்கு எப்படி உண்டாயிற்றென்று யாராவது கேட்டால், அதற்கு அவர், எல்லாம் ஓயாமல் ஆலோசிப்பதினாலேதான் உண்டாயிற்று; இப்போது நான் ஏதாவது ஒரு லோகோபகாரமான காரியம் செய்திருப்பேனானால் அது, வருந்தி உழைத்ததனாலும், நிதானித்துச் சிந்தித்தனாலும் உண்டானதேயன்றி வேறல்ல என்று சொல்வார். அவருடைய நேசர்கள் வந்து, உம்முடைய சாமர்த்தியத்தை உலகத்திலே யாவரும் எவ்வளவோ புகழ்கின்றார்களே! இப்படிப்பட்ட கீர்த்தி உமக்குத் தவிர மற்றெவர்க்கு உண்டாகும் என்று சொன்னால், அதற்கு அவர், என்னுடைய பிரயாசத்தைப்பற்றி உலகத்தார் என்ன நினைக்கிறார்களோ? எல்லாக் காரியமும் எனக்குக் குழந்தை விளையாட்டாய்த் தோன்றுகின்றனவே யொழிய, அதில் யாதொரு வருத்தமும் காணப்படவில்லை. வாலிபத்தில் கடற்கரையில் ஓடுகளையும் கூழாங்கற்களையும் பொறுக்கிக் கொண்டு விளையாடுவதுபோல இப்போது நான், இந்தப் பிரபஞ்சமாகிற கடற்கரையில் இன்னும் கொஞ்சம் சித்திர விசித்திரமான ஓடுகளையும் பளபளப்பான கற்களையும் பொறுக்கிவைத்துக்கொண்டு, விளையாடுகிறேனேயொழிய வேறில்லை என்றார். இப்படியாக அவர் ஈசுவரசிருஷ்டியின் பெருமைகளைக் காணக் காண, தன்னுடைய செய்கைகளெல்லாம் மிகவும் அற்பமாக அவர் கண்ணுக்குத் தோன்றின. இவ்வாறு சிறந்த காரியங்களிலேயே தம்முடைய காலத்தைப்போக்கிக் கடவுளுடைய மகிமைகளை யெல்லாம் கண்டு வியந்து தம்முடைய எண்பத்தாறுவது வயதான 1727-ம் வருஷத்தில் காலஞ்சென்றார். இங்கிலாந்தில் சிறந்த பெரியோர்களைப் புதைக்கும் இடமான வெஸ்டு மினிஸ்டர் ஆபி என்னும் கோவிலிலேயே சமாதி செய்யப்பட்டார். கேம்பிரிஜ் வித்தியாசாலையின் வாயிலில் அவருடைய சிறந்த பிர

திமையொன்று ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றது. அந்தப் பிரதிமையின் பீடத்தில் அடியில் பின் வருகிற கருத்துள்ள வரிகள் எழுதப்பட்டிருக்கின்றன.

ஃ

நவமாய்வானூர் கதிரவன்றன்
கதிரைநன்கு கண்டறிந்து
தவறில்கீர்த்தி பெற்றவராம்
நியூடனெனப்பார் தாய்வரே;
அவமில்பளிங்கைக் கையேந்தி [கி
யகல்வானேக் காயொருபொருளை
கவலையின்றிக் கருதிநிந்துங்
கணிதநூலார் காணீரே.

ஃ

கடைசியாக, அனைவரும் கவனித்துக் கருத்தில் வைக்கத்தக்கதாய் ஒரு மொழி சொல்லுகிறோம். நாம் செய்யும் ஆராய்ச்சிகளும் நியூடனுடைய ஆராய்ச்சிபோலவே யிருக்கவேண்டும். பண்டிதரென்றால் அவர்க்கே தரும் இந்த விஷயம் இப்படி யிருக்க வேண்டுமென்று சந்தேக புத்தியோடு அவர் ஒருநாளும் சொன்னதில்லை; இது இப்படித்தான் என்ற நிச்சய புத்தியுடனேயே கண்டறிந்தார். ஆராய்ச்சியென்றால் அப்படியல்லவா இருக்கவேண்டும். இப்படிப்பட்ட காரியமெல்லாம் விளையாட்டிலாவதில்லை; பிரயாசத்தினாலேயே ஆகத்தக்கது; கண்டபடி ஊகிப்பதனால் ஆவதில்லை; நல்ல பாண்டித்தியத்தினாலேயே ஆகத்தக்கது. நாம் எதைப் பற்றி ஆலோசனை செய்தாலும் இதே நியாயத்தை அனுசரிக்கவேண்டும். அதனின் காரணத்தை நிதானமாய் ஆராய்ந்து, பொறுமையுடன் விசாரித்து உண்மையைக் கண்டறிவோமானால், அப்போதுதான் நாம் விஷயங்களை ஆராயுந் திறமையுடையவரென்று சொல்வதற்கு உரியவர்களாவோம்.

## ஆண் பெண் உரிமை.

இருபா லாரும் ஒருபா லாகார்
ஒருபா லின்றியும் இருபால் விளையா
இரண்டும் வேண்டுவ திறைவ னணைய
ஆண்பெண் ணுரிமை மாண்புற என்றும்
இயற்கை கோடா திலங்கிட வேண்டும்
இயற்கையி னுண்மை இன்புறக் கண்ட
நம்முது மக்கள் செம்மதி கொண்டே
இருபா லுரிமை பெருமா நிலத்தில்
வேறு வேறு வகுத்தனர், மாறு
இயற்கையை மறந்து செயற்கை வழியுழல்
மேல்நாட்டவர்கள் கால்நாட்டியநாள்
தொட்டு நம்முரிமை பட்டுவீழ்ந் தது***

திரு வீ. க.

# சென்றமாதம்

**பெண் கல்வியைப்பற்றி:—**

மைசூர் ஸர்வகலாசாலையின் பட்டமளிப்பு வைபவத்தின்போது சென்னை ஹைகோர்ட் மாஜி ஜட்ஜி ஸர். வி. வி. குமாரசாமி சாஸ்திரிகள் செய்த பிரஸங்கத்தில், ஸ்திரீகளுக்குப் பிரத்தியேகக் கல்வி கற்பிக்கப்படவேண்டுமென்றும், ஆடவர்களே ஜீவனார்த்தமாக பெரிய போட்டியில் வேலைகளுக்கு சிரமப்படும்போது, பெண்பாலரும் அதிற்கலந்து உத்தியோகப் போட்டிபோடும்படி செய்யவொண்ணாதென்றும், இல்லறவாழ்வில் பர்த்தாவுக்கு நெருங்கிய ஸகாயஸ்தர்களாகவும் துணைவிகளாகவும் இருப்பதற்கேற்ற வகையிலேயே அன்னோர்க்கு வித்தை போதிக்கப்பட வேண்டுமென்றும் குறிப்பிட்டார். தற்காலக் கல்வி முறையில் பெண்பாலாருக்குரிய கீழ்த்தரக்கல்வி மிக்க கேவல நிலையிலுள்ளது. சிறுமிகளின் பாடசாலைக்கல்வி அவர்கள் பருவமடைந்தவுடன் நின்றுவிடுகிறது. அதன்பின் குடும்ப பாரத்தை அவர்கள் சுமக்க நேர்ந்து கல்விக்கு அவகாசமின்றிப் போகின்றது. இனி, உயர்தரக்கல்வியின் நிலையோ, அவ்விதம் உயர்தரப் படிப்பு பெற்ற ஸ்திரீ ரத்நங்களிற் சிலர் தவிர, பெரும்பான்மையோர் குடும்ப வாழ்க்கைக்கு ஏற்ற பயிற்சியைப் பெறாராகி, சமைத்தல்—குடித்தனத்தில் உழைத்தல் போன்றவற்றிலிருந்தும் தூரவிலகி நாற்காலிச் சீமாட்டிகளாகின்றனர். இன்னோரை மணந்த கணவன்மார் இவர்களுக்கு தாஸானுதாஸர்களாயிருக்க நேர்ந்துவிடுகிறது. இங்ஙனமாக, கீழ்த்தரக்கல்வி, உயர்தரக்கல்வி இரண்டிலுமுள்ள தவறுதலைத் திருத்திச் செம்மைப்படுத்தாதவரையில் ஸ்திரீ வித்தை அதன் கிரமமான பயனை நல்கிட இயலாது. இத்துடன் சிறுவர்க்கென்று அமைத்த பாடபுஸ்தகங்களையே, சிறுமியர்க்கும் போதிக்க வைத்திருப்பது பெரிய தவறுதலும், அவலக்ஷணமும், அறியாமையுமாகும். குடித்தனவாழ்க்கைக்குரியதான அமைப்பில் பெண்களுக்கென்று தனித்ததான பாட புஸ்தகங்கள் ஏற்படவேண்டியதும் முக்கியம்.

ஃ

**பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளின் ஸ்வதந்திரம் :—**

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திலுள்ள குடியேற்ற நாடுகளின் பார்லிமெண்டுகள் பெற்றிருக்கும் அபரிமிதமான ஸ்வதந்திரத்தை விளக்குதற்கு சமீபத்தில் ஒரு நல்ல திருஷ்டாந்தம் கிடைத்துளது. அயர்லாந்து பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்துடன் சேர்ந்தது. அதன் தலைவர் மிஸ்டர் திவேலரா என்பவர். அந்தத் தலைவரின் ஆக்ஞைபின்படியும், அயர்லாந்திலுள்ள பார்லிமெண்டின் உத்திரவுப்படியுமே யாவும் நடக்கவேண்டும். பிரிட்டிஷ் பார்லிமெண்டுக்கு எவ்வளவு ஸ்வதந்திரமுண்டோ, அதற்குச்சமமாகிய ஸ்வதந்திரத்தை அயர்

---

ஒரு பெரிய கனவானை வியாபாரம் எவ்விதமிருக்கிறதென்று கேட்க, என் வகையில் நன்றாகவே விற்பனையாகிக்கொண் டிருக்கிறதென்றாராம். உள்ளதைமறைத்துப் பேசும்படியே பல சமயங்களும் குறுக்கிடுகின்றன.

லாந்தும், அதைப்போன்ற குடியேற்ற நாடுகளும் கொண்டிருக்கின்றன. இந்தக் குடியேற்றநாடுகளுக்கும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கும் உள்ள சம்பந்தம் சக்கரவர்த்தி பிரதானஸ்தராக வீற்றிருப்பதே. சக்கரவர்த்தியின் ஆட்சிக்கு உட்பட்டதென்ற ஒரு கௌரவமே பிரிட்டனையும் அதன் குடியேற்ல நாடுகளையும் ஒன்று சேர்த்துவைத்திருப்பதாகும். இவ்வாறான தன்மையில் சக்ரவர்த்தியின் பிரதிநிதியாக ஒரு கவர்னர் ஜெனரல் ஒவ்வொரு குடியேற்ற நாடுகளிலும் நியமிக்கப்பட்டு இருந்துவரவேண்டுமென்பது விதி. ஆனல், அந்த கவர்னர் ஜெனரல் தாம் உத்தியோகம் வகிக்கும் குடியேற்ற நாட்டின் உரிமைகளுக்கு எதிரிடையாக நடந்துகொள்ளக் கூடாதென்றும், அரசர் பெருமான் பிரிட்டிஷ் கவர்னமெண்டின் காரியங்களில் எவ்விதம் பிரவேசிப்பதில்லையோ அவ்விதமே இந்த கவர்னர் ஜெனரலும் குடியேற்ற நாட்டுப் பார்லிமெண்டுசெய்யும் விஷயங்களில் தலையிட அதிகாரமற்றவரென்றும், அதற்கு மீறிநடப்பின், குடியேற்ற நாட்டுத் தலைவர் சக்ரவர்த்தியின் அனுமதியைப் பெற்று அவரை அப்பதவிலிருந்து விலக்கிவிட ஸ்வதந்திரமுள்ளவரென்றும் மற்றொரு விதி. இந்த விதியைத்தழுவி மிஸ்டர் திவேலரா அயர்லாந்தில் மன்னர் பிரானின் பிரதிநிதியாய்க் கவர்னர் ஜெனரலாக இருந்த மிஸ்டர் மக்நீல் என்பவரை விலக்கிவிட வேண்டுமென்று சக்கரவர்த்தியாருக்குத் தெரிவித்துவிட, அதைச் சக்ரவர்த்தியாரும் ஏற்று மிஸ்டர் மக்நீலை அவர் பதவியிலிருந்தும் நீக்கிவிட்டார். மிஸ்டர் மக்நீல் அயர்லாந்து கவர்ன்மெண்டின் ஆலோசனைகட்கு எதிரிடையான மனோபாவம் கொண்டிருந்ததே அவரை விலக்கியதற்குக் காரணம். இந்த சம்பவத்தினல் பிரிட்டிஷ் குடியேற்றநாடுகள் பெற்றுள்ள ஒப்பற்ற ஸ்வதந்திரங்களின் பெருமை ஒருவாறு விளங்கும்.

ஃ

"சுதேசமித்திரன்" பொன் விழா:—

நமது தமிழகம் செய்த நற்றவத்தால் "சுதேசமித்திரன்" தோன்றியது. அது ஆரம்பகாலத்தில் ஒரு வாரப்பத்திரிகையாக இருந்ததாம். அதனை இப்பொழுது நம்புவதற்கில்லாவிடினும் அது உண்மையே. தாம் தொட்ட மண்ணெல்லாம் பொன்னுகக்கூடிய அதிர்ஷ்டத்தையை ஸ்ரீமான் ஜீ. சுப்பிரமணிய ஐயர் பெற்றிருந்தாரெனலாம். அவர் பழங்காலத்தில் திறமையுடன் தொடங்கிய ஹிந்து, சுதேசமித்திரன் இரு பத்திரிகைகளும் தென்னிந்தியாவின் இரு நேத்திரங்கள் போன்றும் இன்று ஜொலிக்கின்றன. ஸ்ரீமான் எ. ரங்கசாமி ஐயங்கார் "மித்திரன்" ஆசிரியராய் அமர்ந்ததில் பத்திரிகையை வெகுதூரம் விருத்திசெய்து ஆங்கிலதினசரிகட்கு சமமாக்கிவிட்டார். அவருக்குப் பின் இப்போது ஆசிரியராயுள்ள ஸ்ரீமான் C. R. ஸ்ரீநிவாஸய்யங்காரவர்கள் "சுதேசமித்திர"னை ஸ்ரீமான் எ. ரங்கசாமி ஐயங்காரவர்கள் ஏற்றுக்கொண்ட நிமிஷமுதற்கொண்டு அதன் தலைமை நிர்வாகப் பொறுப்பைத் தாங்கி, இப்போதடைந்துள்ள அபிவிர்த்திகட்கெல்லாம் பிரதான

---

ஒருவன் தன் மக்களுக்குப் பாகம் பிரிக்காமல் தன் மனைவியின் பேருக்கே ஸகல சொத்துக்களையும் எழுதிக் காலஞ்சென்றான். அந்த மனைவியோ மற்றொருவன் மயக்கில் மூழ்கி சொத்துகள் யாவும் இழந்தாள், மக்கள் தாயின் செயலை வெளியிட நாணி மானமாக மௌனமாயிருந்துவிட்டனர்.

காரணபுருஷராக விளங்குபவராவர். மகா மேதாவியான அவரது ஆசிரியத் தலைமையில் "சுதேசமித்திரன்" ஜெகஜ்ஜோதியாய் உன்னதநிலை கொண்டு ஒளிர்கின்றது. "சுதேசமித்திர"னின் வெள்ளிவிழா அதன் 25-வது பருவமான 1908-ம் வருஷத்தில் நடந்தேறிற்று. சென்ற அக்டோபர்மீ 8-ம் தேதியன்று 50-ஆம்வருட ஞாபகமாய்ப் பொன் விழா மிக்க வைபவத்துடன் நிறைவேறியதற்குப் பெரிதும் மகிழ்கின்றோம். தமிழ்பேசும் ஜனங்களின் ராஜீய ஞானப்பெருக்குக்கு "சுதேசமித்திர"னே முதற் காரணமென்பது யாவரானும் ஒப்பமுடிந்தது. "மித்திரன்" ஆசிரியர் ஸ்ரீமான் C.R. ஸ்ரீநிவாஸய்யங்காரவர்கள், இனி வைரவிழாவும் கண்டு பல்லாண்டு பல்லாண்டாக வாழ்க.

ஃ

காலஞ்சென்ற ராவ்பகதூர் ஸ்ரீமான் செல்வரங்கராஜுகாரு :—

சென்னை விவசாய இலாகா பென்ஷண்ட் டிப்டி டைரெக்டரும், ஸைதாப்பேட்டை முனிசிபல் சேர்மனும், தக்ஷிண ஆந்திர க்ஷத்திரிய ராஜுக்கள் சங்கத்தின் தலைவருமாகிய ராவ்பகதூர் ஸ்ரீமான் ஜெ. செல்வரங்கராஜுகாரு தமது 65-வது வயதில் 28-10-32-ல் இரவு 9-மணிக்குக் காலஞ்சென்றதை யறிந்து பெரிதும் துக்கிக்கின்றோம். அவருக்கு உண்டான இராஜப்பிளவைகட்கு எத்தனையோ சிகிச்சைகள்புரிந்தும் குணப்படாமல் மரணமாய் முடிந்தது. ஸைதாப்பேட்டை நகரசபைத் தலைவராயிருந்த சொற்பகாலமான ஒன்பது மாதங்களுக்குள் அவர்புரிந்த ஜனோபகாரமான சீர்திருத்தங்கள் அநந்தம். சென்னையில் ஸமீபத்தில் காங்கிரஸ் மகா சபை கூடியபோது வியவசாயப் பொருட்காட்சியின் தலைமையை வகித்துத் திறமையாய் நடத்தினர். நின்றுபோன "க்ருஷிகன்" பத்திரிகையை மறுபடியும் ஆரம்பித்துத் தமிழ் நாட்டு வியவசாயிகளுக்கு எவ்வளவோ நன்மைகள் செய்தார். ராஜுக்கள் ஸமூகத்தினிடையே புத்துணர்ச்சியும் கிளர்ச்சியும் தோன்ற வைத்து தக்ஷிண ஆந்திர க்ஷத்திரிய ராஜுக்கள் சங்கத்தை ஸ்தாபித்து அதன் தலைவராய் சென்ற ஐந்து வருஷங்களாக இருந்துவந்தார். காபி முதலிய பானங்களை நீக்கி மோரை உபயோகித்தார். தமது உணவிலும் சில கண்டிதமான நிபந்தனைகளை ஏற்படுத்திக்கொண்டு நடந்தார். மகா பரோபகாரியும் தயாளகுண ஸம்பன்னருமாவர். இப்பெரியாருக்கு ஒரு குமாரரும், ஆறு புத்திரிகளும் உண்டு. நிகரிலாத தமிழ் நாவலகளின் பிரவசித்த ஆசிரியராகிய ஸ்ரீமான் ஜெ. ஆர். ரங்கராஜுகாரு இப்பெரியாரின் தம்பியாவார். இச்சோதனையைச் சகித்துத் தாங்குவதற்கான சக்தியையும் ஆறுதலையும் இறைவன் தந்தருள்வாராக. நமது ஆழ்ந்த அனுதாபத்தை இப்பத்திரிகையின் மூலம் தெரிவித்துக்கொள்கின்றோம்.

---

சங்கீத வித்வான் தான் பாடுவதில் மிகச் சிரமப்பட்டாலும், அதில் அவர் அபரிமிதமான இன்பம் அடைகிறார். சில வேலைகளில் எவ்வளவு களைப்பு ஆயாசம் தோன்றினும் அதிலுள்ள இன்பம் கஷ்டத்தைக் கவனியாதபடி செய்துவிடுகிறது. ஒரு நூலாசிரியரோ பத்திராசிரியரோ தாம் ஆராய்ந்து எழுதுவதில் எவ்வளவு சிரமப்படினும், அதிலுள்ள சுவை அவருக்குப் பெரிதும் உற்சாக மூட்டுகிறது. இவ்விதமே ஒவ்வொரு வேலையும் ஊக்கம் கொடுத்து அதைச் செய்வோரை மகிழ்விக்கின்றது. சோம்பேரிக்கோ இந்த இன்பம் இல்லை.




(343-ம் பக்கத் தொடர்ச்சி.)



"டிக்கன்ஸ்" என்பவரின் மொழிகள்.

---

852. One person can no more quarrel without an adversary than one person can play at chess, or fight a duel.

வேறொருவன் துணையின்றி சதுரங்க ஆட்டத்தை விளையாடவும், குஸ்தி செய்யவும் முடியாதோ அதேபோல் விரோதியொருவனின்றி ஒரு மனிதன் சச்சரவு செய்யமுடியாது.

853. Use and necessity are good teachers—the best of any.

அநுபவமும், ஆவசியகமும், நல்ல உபாத்தியாயர்கள். மற்றவைகளைவிட சிறந்தவை.

854. Be trustworthy in all things, from the greatest to the eeast.

பெரிய விஷயங்களிலிருந்து சிறிய விஷயங்கள் வரையில் நம்பிக்கையாக எல்லா விஷயங்களிலும் நடந்துகொள்.

855. Things pass away, like a tale that is told.

சொல்லப்பட்ட கதைகளைப்போல் விஷயங்கள் நடந்துவிடுகின்றன.

856. Worldly goods are divided unequally, and man must not repine.

உலகத்தின் நன்மைகள் சமமில்லாமல் பகுக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் மனிதன் துக்கத்தால் மனம் தளரக்கூடாது.

857. My advice is, never do tomorrow what you can do today. Procrastination is the thief of time.

நான் சொல்லும் புத்திமதி யாதெனில், நீ இன்று செய்யக்கூடிய காரியத்தை நாளைக்குச் செய்யாதே. தாமதம் செய்வது காலத்தைக் கொள்ளையிடும் திருடன்.

858. Where's the good of putting things off? Strike while the iron's hot.

ஒரு காரியத்தைத் தாமதிப்பதால் என்ன நன்மை யிருக்கிறது? இரும்பு சூடாக இருக்கும்போதே அதை அடித்து உருவாக்கவேண்டும்.

859. Every man of true genius has his peculiarity.

உண்மையான ஒவ்வொரு விவேகியும் ஒரு விசேஷ குணத்தைப் படைத்திருக்கிறான்.

860. The loveliest things in life, are but shadows and they come and go, and change and fade away.

வாழ்க்கையின் மனோஹரமான விஷயங்கள் வெறும் தோற்றங்களே. அவைகள் வந்தும் போய்கொண்டுமிருக்கும்; மாறிக்கொண்டிருந்து பிறகு மறைந்துவிடும்.

P. G. குலசேகரன்,
"மனோரஞ்சினி விலாஸ்", ராயபுரம்.




## மாபாவி சிற்றன்னை.





“அடே சுதாகரா! அவளைத் தொடும் உரிமை உனக்கில்லை” என்று கர்ஜித்தாள் சிற்றன்னை.

“அம்மா! நான் மந்தாரத்தை ஒன்றும் செய்யவில்லை” என்றான் சுதாகரன். “அசடே! பின் ஏன் அவள் அழுகிறாள்?

“அவள் அந்தத் தேமாமரத்திலிருக்கும் குயிலைப் பிடித்துத் தரும்படிக் கேட்டாள். நான் முடியாது என்று சொன்னேன். உடனே அவள் அழ ஆரம்பித்தாள்.”

“குயிலா! அம்மம்மா! பொய் சொல்வதைப் பார்! அடே, அவள் உடம்பிலிருக்கும் காயம் நீ கிள்ளியதினாலல்லவா ஏற்பட்டது? போ அப்பால் என் முன் நில்லாதே.”

“ஐயோ! நான் அவளை அப்படிக் கிள்ளுவேனா?”

“சீ! அதிகப் பிரசங்கி!” என்று சீறியமாறு அப்பெண்மணி விரைந்து வந்து சுதாகரனை அறைந்தாள். உடனே மந்தாரம் தனது மாந்தளிர் போன்ற இளங்கைகளால் தன் தாயாரைத் தடுத்தாள். பயன் ஒன்றும் ஏற்படவில்லை. சுதாகரன் அழுது கொண்டு அப்பால் சென்றான். மந்தாரம் மீண்டும் பறவையைப் பிடித்து வரும்படிக் கூறி அவனை “அண்ணா! அண்ணா” வென்று அன்பாய் அழைத்தாள். உடனே சிறிதும் இரக்கமற்ற சிற்றன்னை மந்தாரத்தைத் தூக்கிக் கொண்டு அடுக்களைக்குச் சென்றாள்.

ஃ

மந்தாரத்திற்கு சுதாகரனே உயிர். அவள் அவனை அரைக்கணமும் விட்டுப் பிரிவதில்லை. சுதாகரனும் அவளை உடன்பிறந்த சகோதரியைப்போல் பாவித்து, பாராட்டி வந்தான். அவனுக்கு, பத்து வயதுதான் நிரம்பியிருந்தது. அவனது தாயார் ஆறு வருடங்களுக்குமுன் இவ்வுலகை விட்டு நீங்கினாள். பிறகு சுதாகரன் தன் சிற்றன்னையின் ஆதரவில் வளர்ந்து வந்தான். சிற்றன்னைக்கு அவன்மேல் பிரியம் சற்றுமில்லை. மந்தாரம் சிற்றன்னையின் குழந்தை. சுதாகரன் அவளை எடுத்துக் கொஞ்சாமலும், அவளோடு ஓடியாடி விளையாடாமலும் இருப்பதில்லை. அவன் தனக்கு என்ன துன்பம் நேரினும் மந்தாரத்தைக் குறை கூறான். ஒரு நாள் வாசற்படியில் இருந்த ஒரு பளிங்குப் பாத்திரத்தை மந்தாரம் உடைத்துவிட்டாள். அன்று சுதாகரனுக்கு சிற்றன்னையிடமிருந்து நல்ல சன்மானம் கிடைத்தது. அவன் சகோதரியின்பேரில் வைத்த அபார

மான அன்பினால் அந்தக் குற்றத்தைத் தானே செய்ததாக ஏற்றுக்கொண்டான். இயற்கையிலேயே பெண்மணிகளுக்குத் தங்கள் குழந்தைகளிடம் அன்பு பாராட்டுவோர்மீது இரக்கம் பிறப்பதுண்டு. ஆனால், சுதாகரனின் சிற்றன்னைக்கு இந்த உணர்ச்சியே இல்லை. அவளுக்கு சுதாகரன் கூறுவதும் செய்வதும் எல்லாம் குற்றமாகவே படும். தன் குழந்தையை அவன் எடுத்துக் கொஞ்சவும் அவள் சம்மதியாள். இதுவே சுதாகரனுக்கு ஸகிக்கவொண்ணாத பரம வேதனையையும் மறத்தற்கரிய மனத்துன்பத்தையும் விளைத்தது. அவன் தந்தையாகிய சுந்தரலால் ஒரு ஆபீஸில் குமஸ்தாவாக இருந்தார். அவர் சரியாய் ஐந்து மணிக்கு ஆபீஸிலிருந்தும் புறப்பட்டு வீடுவந்து சேர்வார். அப்போதுதான் சுதாகரனுக்குச் சற்று ஆறுதல் ஏற்படும். எனினும், சிற்றன்னை அவனைப் பற்றி அவரிடம் இல்லாததும் பொல்லாததுஞ் சொல்லி அட்டகாசம் செய்வாள். சுந்தரலால் இதை யொன்றும் காதில் வாங்கிக்கொள்வதில்லை.

ஃ

பள்ளிக்கூடத்துக்குப் போய் வரும் நேரங்களில் மட்டும் சுதாகரனுக்கு சிற்றன்னையிடமிருந்து எவ்வித தொந்திரவும் நேரிடுவதில்லை. பள்ளியை விடுத்ததும் அவன் 'மந்தாரம்' என்று கூவி யழைத்துக்கொண்டு வீடுசேர்வான். அவன் வரவை ஆவலோடு எதிர்பார்த்தவண்ண மிருக்கும் அச்சிறுமியும் ஓடோடி வந்து அவன் கால்களை யிறுகக் கட்டிக்கொள்வாள். உடனே சுதாகரன் தன் தந்தையிடமிருந்து கிடைத்த காசுக்கு வாங்கி வந்த தின்பண்டங்களை அவளுக்குக் கொடுத்து மகிழ்வான். இந்தச் செய்தி சிற்றன்னையின் காதுக் கெட்டும்போதெல்லாம் அவள் தன் குழந்தைக்கு விஷம் கொடுத்துவிட்டதாக அவன் மேல் அபாண்டம் கூறி அட்டகாசம் செய்வாள். மந்தாரம் இதையொன்றும் கவனியாது எப்போதும் "அண்ணு! அண்ணு!" வென்று அன்பாய் அழைத்து அவனுடன் கூடிக் குலாவி நிற்பாள். சுதாகரனும் அவளுக்கு வண்டி, பம்பரம், கப்பல், குருவி முதலிய விளையாட்டுக் கருவிகளை யெல்லாம் அடிக்கடி வாங்கிக் கொடுப்பதுண்டு. மேலும், அவன் ஆனையாகவும் குதிரையாகவும் நடித்து மந்தாரத்திற்கு மட்டற்ற மகிழ்ச்சியை யூட்டுவான். சில சமயங்களில் மந்தாரம் தனது வண்டியில் உட்கார்ந்துக் கொண்டு "அண்ணு! ஹூம் ஹூம்" என்பாள். சுதாகரன் வண்டியை உடனே இழுத்துச் செல்லவேண்டும்; இன்றேல் அவள் பலமாக அழ ஆரம்பிப்பாள். இந்தச் சத்தத்தைச் செவியுறின் சிற்றன்னை அங்குவந்து அவனை நையப் புடைத்து, பழிமொழிகள் சொற்கணைகள் பல அவன்மேல் தொடுப்பாள். சுதாகரனோ, அவள் என்ன செய்யினும் அவள்பேரில் கோபங்கொள்ளாது பொறுமையே உருவெடுத்ததுபோல் வீற்றிருப்பான். அவன் பாடசாலையினின்றும் மாலையில் திரும்பிவரும்போது வீதியிலுள்ள மலர்களையெல்லாம் தன் சகோதரிக்குக் கொடுப்பதற்காகப் பறித்துவருவான். அந்தப் பூக்களில் ஏதேனும் ஒன்று தப்பித்தவறி வீட்டினுள் கிடந்துவிட்டால் அன்றையத்

---

தனக்கு வெகு புகழ் இருப்பதாக நினைத்துக்கொள்ளு மொருவன் அத்துடன் தன்னைத் தூற்றுவா ரெத்தனைபேர் என்பதையும் எண்ணிப்பார்த்துக் கொள்வதில்லை. தன்னை துரும்புபோல் நினைக்கும் சிலர் உண்டென்பதையும் அந்த கம்பீரஜன்னி மறந்து விடுகிறான்.

தினம் பெருங் கலகம் உண்டாவது திண்ணம்.

ஃ

அன்று விடுமுறை நாளாதலால் சுந்தரலால் வீட்டில் இருந்தார். சுதாகரனும் சிற்றன்னையின் கொடுமைக்கும் ஹிம்ஸைக்கும் ஆளாகவில்லை. அவன் தந்தையை நோக்கிக் கூறினன்:—அப்பா! எனக்கு எழுத தாள் இல்லை. நாளைக்குப் பள்ளிக்கூடத்துக்குப் போகும்போது தாள் வாங்க வேண்டும்.

சுந்தரலால்:—தாள் வாங்கவேண்டுமென்று ஒரு வாரத்துக்குமுன் தானே நீ என்னிடமிருந்து ஒரு ரூபாய் வாங்கிச் சென்றாய்?

சுதாகரன்:—ஆம் அப்பா! அதில் எட்டணாவுக்கு நான் ஒரு பொம்மை வாங்கினேன். மந்தாரத்திற்கு அதன்மீது பிரியம் அதிகம்.

சுந்தரலால்:—குழந்தாய்! நீ உண்மையை உரைத்ததால் நான் மிகுந்த சந்தோஷமடைகிறேன். இப்போது உன் தங்கைக்கு விளையாட்டுக் கருவிகள் ஏராளமாயிருக்கின்றன. ஆதலால், நீ இனி அவைகளை விலை கொடுத்து வாங்காதே. உனக்கு தாள் வாங்குவதற்கு வேறு பணம் தருகிறேன்.

சுதாகரன்:—இனிமேல் அப்படியே செய்கிறேன், அப்பா!

ஃ

"அம்மம்மா! சிறு குழந்தையல்லவா மடியில் உட்கார்ந்திருக்க" எனக் கூறியவண்ணம் சிற்றன்னை அங்குற்றாள். சுதாகரன் இவ் வார்த்தைகளைக் கேட்டுத் திடுக்கிட்டுத் தனது தந்தையின் மடியைவிட்டிறங்கினன். சுந்தரலால் அவனை மீண்டும் தூக்கி மடியில் வைத்துக்கொண்டார். இச்செய்கை சிற்றன்னைக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. அவள் அதிருப்தியோடும் அருவருப்போடும் அவ்விடத்தைவிட் டகன்றாள். சின்னேரத்திற்கெல்லாம் மந்தாரம் கையில் ஒரு பந்தை வைத்துக்கொண்டு ஓடியாடி விளையாடியவாறு அங்கு வந்தாள். அவளைக் கண்டதும் சுதாகரன் சந்தோஷத்தோடு தந்தையின் மடியினின் றிறங்கி அவளை இரு கையாலுமெடுத்தணைத்து முத்தமிட்டுக் கீழே விடுத்தான். உடனே அவள் சுந்தராலாவின் மடியில் ஏறி உட்கார்ந்துக் கொண்டு அவரது தாடியைச் சோதிக்கத் தொடங்கினள். காண்போர் கண்ணையும் கருத்தையும் தம்மாட்டுப் பிணிப்புண்ணச்செய்யும் அச்செல்வமக்களின் இனிய முகங்களைக்கண்டு அறிவு மயங்கி இன்பக்கடலிலாழ்ந்துத் திளைத்த சுந்தரலால் தமக்குள் பின்வருமாறு கூறிக்கொண்டார்:—"குழந்தைகள் இல்லாத வீடு மழை முகங் காணாத காடு என்றார்."

சுதாகரன்:—அப்பா! மந்தாரத்திற்குக் கல்வி கற்பிக்க வேண்டாமா? அவளை என்னுடன் பாடசாலைக்கு அனுப்புங்கள்.

தந்தை:—குழந்தாய்! அவளுக்கு வயதாகவில்லை. இன்னும் இரண்டு வருடம் செல்லவேண்டும். அப்போது அவளை உன்னுடன் பாடசாலைக்கு அனுப்புகிறேன்.

சுதாகரன்:—அப்பா! அவளுக்கு வயது மூன்று ஆகிவிட்டதே. இன்னும் தாமதம் செய்யலாமா?

---

அதர்மத்தின் துணைகொண்டு மானிடர் செழித்தோங்குகிறார்கள். பகைவர்மீது வெற்றிகொள்கிறார்கள். தாங்கள் விரும்பிய பொருள்களையும் பெறுகிறார்கள். ஆனல், அவர்கள் வேரில் அழிந்துபடுகிறார்கள்.

தந்தை:—அவளுக்கு எழுத்துகளைத் தெளிவாய் சொல்லத் தெரியாது. ஆதலால் அவளை இப்போது பள்ளிக்கூடத்திற்கு அனுப்புவதில் பிரயோஜனமில்லை.

மந்தாரம்:—(அழுதொழுகும் குரலில்) எனக்கு அண்ணுகூட போகணும்.

தந்தை:—(அகமலர்ந்து) சரி, உன்னையும் அனுப்புகிறேன்.

மந்தாரம்:—எனக்கு அண்ணுவுட புத்தம்! (புஸ்தகம்)

சுதாகரன்:—நான் அதை உனக்கு வாங்கித் தருகிறேன்.

ஃ

அந்த சமயத்தில் "இவனுக்கு எப்போதும் அவளைத் தொந்தரை செய்வதுதான் வேலை. இப்போது தேனொழுகப்பேசி, பின்னல் சமயம் வாய்க்கும்போது அவளை நையப் புடைப்பான்" என்று கூறியவண்ணம் சிற்றன்னை அங்குவர, சுதாகரன் மௌனம் சாதித்தான். "இல்லை, அப்பா!" என்று பதிலுரைத்தாள் மந்தாரம். இதனைக்கேட்டு சிற்றன்னை "இவன் பெரிய திருட்டுக்கழுதை" என்று சீற்றத்தோடு மொழிந்தவண்ணம் அவ்விடத்தைவிட்டு நீங்கினள். அப்போதுதான் சுதாகரனுக்கு மூச்சு சரியாய் வெளிவரத் தொடங்கியது. அவன் சிற்றன்னையைக் குறித்து தன் தந்தையிடம் யாதொன்றும் பேசியிருப்பதில்லை. பாடங்களைப் படிப்பது, மந்தாரத்தோடு விளையாடுவது ஆகிய இவ்விரண்டு எண்ணங்களே அவன் மனதில் குடிகொண்டிருந்தன. சுதாகரன் நல்ல பையன் என்பது சுந்தரலாலுக்குத்தெரியும். ஆகவே, அவர் தமது மனைவி கூறுவதைக் கொஞ்சமும் பொருட்படுத்துவதில்லை.

ஃ

சுதாகரன் மற்ற சிறுவர்களோடு விளையாடுவதோ பேசுவதோ கிடையாது. அதனல் அவன் வயதுச் சிறுவர்கள் பலர் அவனை நேசிக்கவில்லை. ஒருநாள் அவன் பாடசாலையிலிருந்துப் புறப்பட்டு வீட்டுக்கு வந்து கொண்டிருக்கையில் ஒரு துஷ்டப் பையன் அவன்மேல் கல்லெறிந்தான். மறுநாள் பாடசாலைக்குச் செல்லும்போது அதை உபாத்தியாயரிடம் கூறவேண்டுமென்று பலர் அவனை வற்புறுத்தினர். ஆனல், சுதாகரன் அதற்கிணங்கவில்லை. அவன் அழுது கொண்டு வீடுவந்து சேர்ந்தான். சிற்றன்னை சிறிச் சினந்து அவன்மீது வசைச் சொற்களை சரமாறிப்பொழிந்தாள். "உன்னுடைய சண்டித்தனத்தை எல்லாரிடமும் காட்டினல் முடியுமா? அதிகப் பிரசங்கிகளுக்கு இதுதான் தகுந்த வெகுமதி. மணிலாலன் நல்ல பையன். பாவம்! அவன் உன்னை நையப் புடையாமல் விட்டானே!" என்பதுதான் சிற்றன்னை கூறிய ஆறுதல். அவனது சிறிய தங்கை மட்டும் அவன் அடைந்த துயரத்தில் பங்கு கொண்டாள். அவன் தந்தையோ அன்று வீட்டிலில்லை. சிற்றன்னை மறைந்ததும் வயது முதிர்ந்த ஒரு வேலையாள் அங்கு வந்து அன்பான வார்த்தைகள் கூறி அவனை ஆற்றித் தேற்றினன்.

ஃ

---

சிலருக்குத் தொட்டகாரியமெல்லாம் கைகூடுகிறது. ஆனல், அவர்கள் அதிகமாகக் கர்வித்துப் போகாதிருப்பதற்காக, பிறகு அவர்கள் தொடுகிற வேறுகாரியங்களில் கடவுள் கஷ்டம் காண்பித்துத் தோல்வியடையச் செய்து விடுகிறர்.

கங்கை நதி அவர்கள் வீட்டி னருகே ஓடிக்கொண்டிருந்தது. பள்ளிக்கூட விடுமுறை நாட்களில் சுதாகான் தன் தங்கையோடு அந்நதிக் கரையில் வந்து விளையாடிக்கொண்டிருப்பான். அவர்கள் இருவரும் கடிதத்தில் படகு செய்து அதை நதியில் போட்டு அது அசைந்து அசைந்து செல்லுவதைக்கண்டு வியப்பதும், களிகூர்ந்து குதிகொள்ளும் நீர்வாழு மச்சம் முதலிய பிராணிகளைக்கண்டு களிப்பதுமா யிருப்பார்கள். நதியில் எழும் சின்னஞ்சிறு அலைகளில் அகப்பட்டுழலும் கடிதப் படகுகளைக் காணும்போதெல்லாம் மந்தாரம் பெருந்துயரம் அடைவான். அவ்வேளைகளில் அவன் நதியில் பிரயாணம் செய்யும் படகோட்டிகளைக் கூவியழைத்து அவற்றை காக்கும் படிக் கூறுவாள். சில சமயங்களில் மீன்களைப் பிடித்துத் தின்னும் நோக்கத்துடன் நதிக்கரையில் வந்துட்காரும் பறவைகளைப் பிடித்துத் தரும்படி மன்றுடுவாள். சாது சுதாகான் தன்னருமைத் தங்கையின் ஆசையை நிறைவேற்றப் பன்முறை முயன்றனனாயினும் அவன் எண்ணம் ஒருநாளாயினும் நிறைவேறியதில்லை. ஏனெனில், அவன் கிட்ட நெருங்கும் போது பறவைகள் அப்பால் பறந்து போய்விடும். சிற்றன்னையிடமிருந்து 'பரிசு' பெறும் நாட்களில் சுதாகரன் தன்னந் தனியனாய் நதிக்கரையில் வந்தமர்வான், அப்போது அவன் மனம் இவ்வுலகத்திலிராது. அன்பும் ஆர்வமும் இன்பமும் நிறைந்த அற்புத உலகமொன்றில் அவன் அரசனாய் வீற்றிருப்பான். அவன் கண்கள் அவனது ஆழ்ந்த சிந்தனையைத் தோற்றுவித்துக் கருணையொளி வீசித்திகழும்; அவனது அழகிய தோற்றம் அவ்வழிச் செல்வோர் மனதைக் கவரும். நீரில் பிரதிபலிக்கும் அவனது விசாலமான நெற்றி பஞ்சமிச் சந்திரனைப் போல விளங்கும். காண்போர்க்கு அவனிடம் அன்பும், இரக்கமும், மதிப்பும் தோன்றுவது இயல்பு. இத்தகைய அழகிற்கேற்ற குணமும் அவனிடம் இருந்தது.

ஃ

ஒரு நாள் அண்டை வீட்டு உமா சுந்தரலால் வீட்டிற்கு வந்தாள். அப்போது சுந்தரலால் ஆபீஸுக்குச் சென்றிருந்தார். உமா சிற்றன்னையை நோக்கிக் கூறினாள்:—

"சுதாகான் இன்று எங்கு சென்ருன்? மந்தாரம் ஏன் இப்படி பித்து பிடித்தவன்போல் இருக்கிருன்?"

சிற்றன்னை:—அந்தப் பேய் பள்ளிக்கூடத்திற்குப் போயிருக்கிறது. என் வீட்டுக்காரும் அதற்கென்று உள்ள பணத்தையெல்லாம் வாரிக் கொட்டுகிருர்.

உமா:—அவன் அவருக்கு ஒரே மகனல்லவா? அவனிடம் அன்பு பாராட்டுவது சகஜந்தானே? அதிலும் சுறுசுறுப்புள்ள குழந்தைக்குக் கல்வி கற்பிக்காமலிருக்கக் கூடுமா?

சிற்றன்னை:—நல்ல சுறு சுறுப்பு! அவனுக்கு எந்த நேரமும் விளையாட்டு தான். அவனல் இவளும் கெட்டுப் போனாள். பன்றியோடுச் சேர்ந்த கன்றும் மலம் தின்னுமல்லவா?

உமா:—நீ அப்படிச் சொல்லாதே! அவன் நல்ல பையன், வெகு அக்

---

ஒன்றில் துணிவு கொள்ளுதல் உலகில் யாருக்கும் சகஜம். அந்தத் துணிவு அந்தவேலையை ஜெயித்துக் கொடுத்துவிட்டால் அவனே வெற்றியாளன், கீர்த்திப்பிரதாபன், சிலாக்கியபூஷனன். தவறிளே மொட்டையன், கடன்காரன், மானமிழந்தவன், உதவாக்கட்டை!

கரையாய்ப் படித்து வருகிறான். ஆனால் என்னச் செய்வது? அவன் தலையெழுத்துமட்டும் கோணலாயிற்று. அதனால்தானே அவனுக்குத் தாயின் அன்பை அனுபவிக்கக் கொடுத்து வைக்கவில்லை. பெற்ற தாய் உயிருடன் இருந்தால் தன் குழந்தை சீர்கேட்டையப் பார்ப்பாளா? (மற்றதில் முடிவு.)

த. சு. சங்கரலிங்கம்.

[இக்கதையைக் கதைக்காக வாசியாமல் அதன் அழகிய அமைப்புக்கும், இன்ப நடைக்கும், சுவையுள்ளவர்ணனைகளுக்குமாக வாசியுங்கள். ப-ர்.]

# படிப்பின் முக்கிய அம்சங்கள்.



மற்ற வித்தைகளைப் போலவே படிப்பும் பழக்கத்தைப் பொறுத்ததா இருக்கிறது "ஜீதி" என்னும் ஜெர்மெனி வித்தியா நிபுணர், எவ்வளவோ காலமாய் அவ்வித்தையை அப்பியாசித்தும்' அதை முழுதும் அறிந்துகொள்ளத் தமக்கு அசாத்தியமாயிருக்கிறதென்று சொல்லியிருக்கும்போது, சாமானிய ஜனங்கள் அதில் தேர்ச்சியடைவது கஷ்டமே. எழுத்துத் தெரிந்தவரெல்லாம் படிக்கத் தெரிந்தவர்களா?

இக்காலத்தில் படிப்பதற்கு விஷயங்கள் அதிகமாய் அகப்படுவது நன்மையாக்கக் கூடியதாயிருந்தாலும், கெடுதிகளும் விசேஷமாகவே இருக்கின்றன. அச்சுதந்திரத்தின் உதவியால் விசேஷமாயும், விலை சகாயமாயும், நமக்குப் புத்தகங்கள் கிடைக்கின்றன. இவைகளை வாசித்து இவற்றிற் கூறிய விஷயம் எவ்வளவு தூரம் சரியானதென்று ஆராய்ச்சி செய்யாமல், புத்தகத்தில் சொன்னது தான் சரி என்று நம்பி விடுவோமானால், நமது விவேகம் விருத்தி யடைவதற்குப் பதிலாய்க் குன்றியே விடும். சிலர் புத்தகங்களைப்படித்தே தம் காலமெல்லா மொழிக்கிறார்கள். இவர்கள் இதரர்களுடைய மனதையறிய விரும்புகிறார்களேயன்றி, தங்களுடைய மனதை யறியச் சிரத்தை எடுத்துக் கொள்வதில்லை; அப்படிச்செய்ய அவர்களுக்கு ஒழிவுமில்லை. முற்காலத்தில் படிப்பதற்குப் புத்தகங்கள் அருமையாயிருந்தமையினால் விவேகிகள் அநேக விஷயங்களைப்பற்றி நினைத்து நினைத்துத் தாமே ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்தனர். அநேகமான கிரந்தங்களை வாசிப்பதினாலேயே ஒருவனுக்குச் சிறந்த அறிவுண்டாகிற தென்பதில்லை. ஒரு சிறிய நெருப்பின்மேல், ஒருவண்டிக் கட்டையைப்போட்டால் அது அந்நெருப்பை யவித்து விடுகிறது. ஆனால், அதுவே பெருந்தீயை உண்டாக்கினும், உண்டாக்கும். அதுபோலவே, உற்சாகமில்லாத மனதிற்கு அதிகப் படிப்பினால் என்ன பயன்? அறிவு குறைந்திருப்பது எவ்வளவு கெடுதியோ, அவ்வளவு கெடுதி தான் படிப்பின் மிகுதியும். ஆதலால் நாம் படிக்கும் விஷயத்தில் கீழ் குறித்திருக்குமவைகளை கவனிக்க வேண்டியது அத்தியாவசியமாகும். படிப்பிற்கு ஆவல் முக்கியமானது. ஓர் சாஸ்திரத்தில் நுண்ணிய ஆராய்ச்சி செய்ய விரும்பினாலன்றிப் பெரிய கிரந்தங்களை வாசித்து சாராம்சத்தைக் கிரகிக்கச் சக்தி தோன்றாது.

எதன்மீது மனதிற்கு ஆவலுண்டாகிறதோ, எந்தத் தருணத்தில் மனம் உற்சாகத்தை யடைந்திருக்கிறதோ அச்சமயத்தில் படிப்பதிலுண்டாகும், பிரயோஜனம் அதிகமாகும். எதையும் ஓர் கருத்துடன் படிக்க வேண்டும். படித்த விஷயத்தைச் சுயமாக எழுதிப் பத்திரிகைகளில் பிரசுரிப்பதற்கோ, அல்லது ஒரு சபையில் உபந்யாசிப்பதற்கோ, எற்ற விதமாய் ஒழுங்குபடுத்தி மனத்திலிருத்துவது நல்லது. ஒரு விதமான கருத்துமில்லாமல் படிப்பது காலப்போக்கேயன்றி, வேறல்ல. படிக்கும் படிப்பானது பலனைக் கொடுக்கக் கூடியதாயிருக்கவேண்டும். படித்த விஷயத்தைக் கஷ்டப்பட்டுச் சொந்தமாக்கிக் கொண்டாலல்லது படிப்பிற்குப் பய

வில்லை. சாப்பிட்ட மாத்திரத்தி லேயே சரீரத்திற்குப் பலம் வந்து விடுமா? உணவு சரீரமுழுவதும் கலந்து பரவினாலல்லது பல முண்டாகுமா? அங்ஙனமே படித்த மாத்திரத்தி லேயே அதன் பலன் தெரிந்திடாது. படித்ததைத் திரும்பவும் சிந்தனை செய்து, முன்னுள்ள ஞானத்துடன் இதையும் ஒன்று சேர்த்துச் சொந்த மாக்கிக்கொண்டால்தான் நலந்தரும்.

திருந்த புஸ்தகங்களையே நாம் படிக்கவேண்டும். இதுதான் மிகவும் கஷ்டமானது.

படிக்கும்பொழுது பென்சில் இருக்கவேண்டியது அவசியம். அத னால் முக்கியமான அம்சங்களைக் குறிப் பிட்டு வைத்தால் மறுதரம் வாசிக்கும் பொழுது, அனாவசியமானவைகளை நீக்கி, அவசியமானவைகளை மாத்தி ரம் கவனித்து மனத்திலிருத்திக் கொள்ளலாம்.

மேற் கூறிய நிபந்தனைகளைக் கவ னித்துப் படிப்போமானால் மனதுக் குச் சந்தோஷமும், விவேகத்திற்கு அபிவிருத்தியும், உலகத்திற்கு நன்மை யும் பயக்கும். குணமும் உண்டாகும். முற்காலத்துப் பெரியோர் செய்த செய்யுள்களில் நாம் அறிய வேண்டி யவை அநேக முண்டாகையால் தற் காலத்துக் கிரந்தங்களை உபேட்சை செய்யலாமென எண்ணிவிடலாகாது. முற்காலத்து விஷயங்களையும், தற் காலத்து விஷயங்களையும், அறிந்த வன் தான் உண்மையாய்ப் படித்தவ னென்று சொல்லப்படுவான். மிற்க, புஸ்தகங்களைப் படித்தல் மாத்திரம் போதாது. புஸ்தகங்களிற் சொல்லிய படியே குருட்டுத்தனமாய் நடக்கா மல், அப்படி நடப்பது சரியா, அல் லவா, என்பதைப்பற்றி ஆலோசித்து நன்மார்க்கத்தில் நடக்கவேண்டும்.

ச. முனிஸ்வாமி பிள்ளை,
சரஸ்வதி சபைத்தலைவர்,
டர்பன்,—நெட்டால்.



## தனக்கு சம்பந்தமற்ற இடத்தில் விசாரப்படுவதில்லை



ஒரே பெண்ணை இருவரும் காதலிக்க, கடைசியில் அவளை ஒருவன் மனைவியாக்கிக் கொள்கிறான். பிறகு இந் தப் பெண்ணுக்கு ஜன்னி பிறந்து நெருக்கடி ஏற்பட்டா லுங்கூட, அவளை மணந்து கொள்ளாத மற்றவன் அதைப் பற்றிய சிரத்தையே இல்லாதவனாகி விடுகிறான். அது தன் சொந்த சொத்து அல்ல வென்பதால் அதைப் பற்றி இவன் மனதில் எவ்வித கவலையும் விசாரமும் தோன்று வதில்லை. விலைக்கு விற்கப்பட்டுத் தீர்ந்து போன தனது பாடு இப்போது நோயாகக் கிடக்கிறதென்றால் அதைப் பற்றிய விசாரம் விற்றவனுக்குக் கிடையாது. ஆனால் விற் காமல் அந்த மாடு அவனுக்கே சொந்தமாக இருந்திருந் தாலோ—அப்போது மட்டும் கவலை ஏற்படலாம்போலும்.

# சுகம் தப்பினால்?

1. வைத்தியர் மருந்து தின்ன வேண்டுமென்பார்.

2. ஜோஷியர் ஜாதகம் பார்க்க வேண்டும். கிரகங்களின் பலன் போதாது. நவக்கிரக சாந்தி பண்ண வேண்டுமென்பார்.

3. மாந்திரீகன் பில்லி ஏவல் சூன்னியம் பிசாசுகள் முதலியவற்றால் வந்தது. அதற்கு சாந்தி பரிகாரம் செய்யவேண்டுமென்பான்.

4. வீட்டார் பச்சைத் தண்ணீரில் குளித்ததனால் வந்தது; ஆற்றில் குளித்ததால், அது இது தின்றதால் வந்தது; நான் அப்போது சொன்னேன் கேட்டையா என்பார்கள்.

5. ஆங்கிலம் படித்த நாகரீகர்களைக் கேட்டால் தன் அஜாக்கிரதையால் வந்தது என்று சொல்வார்கள்.

6. வஸ்தாதுவோ கஸரத் முதலிய தேகப்பற்றிகள் செய்து தேகத்தைத் திடப்படுத்திக் கொள்ளவேண்டுமென்பான்.

7. வேதாந்தியைக் கேட்டால் பூர்வ கர்ம சம்பந்தத்தால் வந்தது. கர்மம் விலகும்போது தானே போய்விடுகிறது. மருந்தினால் என்ன நடக்கப்போகிறதென்பார்.

8. பிரார்த்தனைக் காரர்களைக் கேட்டால் திருப்பதிக்கும் பழனிக்கும் உண்டியல் செலுத்தல், கேசங்கள் கொடுத்தல், வெள்ளியில் தடை செய்து போட்டுக் கொள்ளுதல் முதலியவற்றால் விலகுமென்பர்.

9. மெஸ்மரிசக்காரனைக் கேட்டால் வியாதியில்லையென்று நம்பிவிட்டாயானால், போ போ போ என்று மனோதிடத்துடன் கூறுவாயானால் உடனே வியாதி போய்விடுமென்பான்.

10. சாமான்யர்கள் மாரியாயிக்கு ஆடு வெட்டி குழிமாயிக்குப் பூஜை போடு, இருளன், முனியன், காட்டேரியைக் கும்பிடு என்பார்கள்.

11. வீட்டில் பழங்காலப் பெரியோர்களைக் கேட்டால், திருஷ்டி, தோஷம், கண்ணெச்சில் பட்டுவிட்டது என்பார்கள்.

12. சாயபுவைக் கேட்டால் நாகூருக்குப் பிரார்த்தனை செய்து கொள்ளென்பார்.

---

" புறநட்டதம் வேர்ப்பார் நச்சுநீர் பகைமை
வெளியிட்டு வேறுதல் வேண்டும்—கழிபெரும்
கண்ணோட்டஞ் செய்பேல் கருவிவிட்டாற்றுவார்
புண்வைத்து மூடார் பொதிந்து " —நீதிநெறிவிளக்கம்.

நம்முடைய தேசத்தில் யாதாயினும் ஒரு ரணம் உண்டாகுமானல், உடனே அதனை வெட்டிப் பரிசோதிக்க வேண்டுமன்றி அதனை மறைத்து வைக்க வொண்ணுது. அதுபோல், புறத்தே அதாவது வெளியே சிநேகம் பாராட்டி, அகத்தே அதாவது நெஞ்சுக்குள்ளே பகைமை பாராட்டுவோருடைய நஞ்சுத் தன்மையான நாம் உடனே அவருக்கு — நீ இப்படிப்பட்ட வஞ்சகமான குணமுள்ளவன் — என்று வெளிப்படுத்தி அவரைவிட்டுப் பிரிந்துகொள்வதே முறையாகும் — என்பது இச்செய்யுளின் கருத்து. தம்முடைய கபடகுணங்களை யறிந்துவிட்டார்களென்று அந்த வஞ்சகர்கள் தெரிந்ததும், அப்படி அறிந்தவர்களோடு சேராமல் ஒதுங்கிப் போய்விடுவார்கள்.




பண்டிட் எஸ். எஸ். ஆநந்தரின் ஔஷதங்கள் :—

சென்னை தங்கசாலைத் தெருவு தமிழ் வைத்தியசாலையினின்றும் பண்டிட் ஆநந்தரின் "ஆநந்த ஸ்னோ", "ஆநந்தரின் டெண்டல் கிரீம்", "அமிர்த சுராபிலேகியம்" இம்மூன்றும் வரப்பெற்றோம். "ஆநந்த ஸ்னோ" என்பது முகத்தில் ஏற்படும் தழும்புகள், தோல் சுருக்கம் முதலியவற்றை நிவர்த்தித்து வசீகர வதனம் தருகின்றது. முகத்தை தேஜஸ் உள்ளதாயும் அழகுடையதாயும் ஆக்குகின்றது. "டெண்டல் கிரீம்" என்னும் பல்மெழுகு பற்களைச் சுத்திசெய்து இன்பமான வாசனையை உண்டுபண்ணி, பற்சந்திலுள்ள கிருமிகளைக் கொன்று பற்களுக்கு நலத்தையும் பலத்தையும் ஊட்டுவிக்கின்றது. நாகரீகர்கள் விரும்பும்வாறாகவும் உள்ளது. "அமிர்தசுராபி" லேகியமோ சிறந்த தாது விருத்தி ஔஷதமாய் உயர்ந்த முறையில் ஆக்கப்பட்டுள்ளது. அபின், கஞ்சாவைச் சேர்த்து ஆபாஸப்படுத்தும் அலங்கோலம் இதிலில்லை. வெண்ணெய் மயமாய் லேகியம் மிகு ருசிகரத்துடனும், அபூர்வ குணத்துடனும் அமைந்துள்ளது. பல வியாதிகளைக் கண்டித்துத் தேக புஷ்டியைத் தருகின்றது. ஸ்ரீமான் எஸ். எஸ். ஆநந்தம் அவர்கள் தமிழ் நாட்டின் பழங்காலத்துப் பண்டித மணிகளில் ஒருவரும், ஒரு பெரும் சமூகத் தலைவருமாவார். அவரது மேன்மையான ஔஷதங்களை நாம் மதிப்புடன் பாராட்டுகின்றோம்.

ஃ

பெண்கள் உடற்பயிற்சி:—

[இது முதற்பாடம். இராமநாதபுரம் ஜில்லா கீழச்சிவற்பட்டி ஸ்ரீமான் லே. சோமசுந்தரன் அவர்கள் இயற்றியது. விலை குறிப்பிடவில்லை.]

நங்கையரும் உடற்பயிற்சி புரிந்து சிறந்த தேகக்கட்டுள்ளவர்களாய் விளங்கவேண்டுமென்றும், சமைத்தல், வீட்டு வேலைகளைச் செய்தல் முதலியவற்றையே தேகாப்பியாசமாக எண்ணிவிடவொண்ணாதென்றும், சாஸ்திரீகமான சரீராப்பியாஸ முறைகளால்தான் உடல் வலிவு ஏற்படுமென்றும், வீரத்தாய்மார்களாலேயே வீரமக்கள் தோன்றவேண்டுமென்றும் விவரித்து, சரீராப்பியாஸப் படங்கள் 24-வரையும் இந்நூலுடன் சேர்த்து அவற்றிற்குக் குறிப்புகளும் கொடுத்திருக்கிறார். சிறுமிகள் பாடசாலையில் இவ்வாறு பயிற்சி பெறுதற்குக் கூடும். ஏற்கெனவே, கும்மி, கோலாட்டம் முதலிய தேகாப்பியாசங்கள் சாதாரண விளையாட்டுகளின் ரூபமாகவே பள்ளியில் கற்பிக்

---

ஒருவரின் உண்மைக்குணம் அறியவேண்டுமோனால், சில நிமிஷங்கள் வரையில் பொதுவிஷயங்கள் பேசியபடியிருந்து, பிறகு உனது சொந்தக் கஷ்டங்களை உனது நண்பரின் கஷ்டமெனக் கூறி, உதவிக்கோருவாயானால், அப்போது அவர் தனது உள்நெஞ்சைத்திறந்து அவரது உண்மையான குணத்தைக் காட்டிவிடுவார்.

கப்படுகின்றன. சிறுமிகளல்லாதாரின் விஷயத்தில் இந்நூலிற் காணும் அப்பியாசங்கட்கு வசதிகள் கிடைப்பது அருமையே யெனினும், இந்நூலின் அறிவைத் தம் மனத்துள் பதிய வைத்துக்கொள்ளுதல் வீண் போகாதென்று நம்பலாம். இதன் ஆசிரியர் பெண்மணிகள் தமக்குள்ளாகவே ஒரு ஜீவனோபாயம் தேடிக் கொள்ளவேண்டுமென்கிறார். கணவனுக்குப் பிறகு ஜீவனார்த்தஹேதுவின்றிக் கண் கலங்குவோர் எண்ணிலராவர். கணவனுள்ளபோதே ஒரு வருவாயினைப் பெறுதற்கு அவர்கள் முயற்சிகொள்வது நன்றாகும். எல்லோருமே தம் மனைவியர்க்குச் சொத்துக்கள் வைத்துவிட்டுச் செல்வதில்லையாதலின், இவ்விஷயமும் சிந்திக்கற்பாலதே.




**எரிமலை எதனால் ஆக்கப்பட்டது?**:—நாம் எரிமலைகளை ஆராயலாம்; இருக்கும் நிலையை அறியலாம்; என்ன எரிமலையினின்றும் வெளிவருகிறதென்பதைப் பார்க்கலாம். ஆனால் ஆரம்பத்தில் எரிமலை எவ்வாறு உண்டானதென நம்மால் அறிய முடிய முடியவில்லை. ஆனாலும் சாதாரண மலைகளைப்போலவே இவைகளும் உண்டாகியிருக்கவேண்டுமென்று ஊகிக்க நேர்கிறது. மலைகளும் எவ்வாறு உண்டானதென அறிய நம்மால் சாத்யமில்லை. பின் ஆராய்ந்து பார்ப்பின் ரேடியம் என்னும் ஒரு வஸ்துவாலேயே மலைகளும் எரிமலைகளும் ஆக்கப்படுகின்றன என அறிகிறோம். நாம் எதனால் இப்படி நினைக்க வேண்டியதிருக்கிறதென்றால் நாம் எந்த பாசறையைச் சோதித்தாலும் அதில் ரேடியம் இல்லாமலிருக்கவில்லை. ஆகையால், நாம் எரிமலைகளும் ரேடியம் என்பதாலேயே ஆக்கப்படுகிறது எனக் கொள்ளலாம்.

**கற்களையும் பாறைகளையும் மழை கரைக்கிறதா?**:—மழைநீரில் தண்ணீரைத்தவிர மற்றும் இரண்டு வஸ்துக்கள் இருக்கின்றன. அவைகள் கிரேனைட் என்னும் மிகக் கடினமான பாறைமுதல் எல்லாப் பாறைகளையும் கரைக்க வல்லமை பொருந்தியவை. இப்பொருள்கள் என்னவெனில் "நைட்ரிக் ஆசிட்டும்" "கார்போனிக் ஆசிட்"டுமாம். இந்த இரண்டு பொருள்களும் பாறைகளை மெதுவாகச் சாப்பிடுகின்றன. அவைகளில் கார்போனிக்ஆசிட்தான் மிகவும் கெடுதலானது. அதுதான் முதலில் கடினமாயிருக்கும் கிரேனைட்டையும் எல்லாக் கற்களையும் கரைத்து சிறு கூழாங்கற்களாக மாற்றி பின் மணலாக்குகின்றது. ஆனால் எப்படியும் இந்த வேலைகள் மிகவும் துரிதமாக நடைபெறுகின்றது. ஆகையால் மழை கற்களையும் பாறைகளையும் கரைக்க வல்லமை பொருந்தியதெனக் கூறலர்ம்.

**நாம் தூங்குகையில் ஏன் நம் சக்திக்கு மீறியவைகளையும் கனவு காண்கிறோம்?**:—நம் சக்திக்கு மேற்பட்டவைகளையும் நம் தூக்கத்தில் கனவு காண்கிறோம். அது ஏதென்றால் நம் மூளை அக்காலத்தில் மிகுந்த உன்னத ஸ்திதியில் வேலை செய்கிறது. இது உண்மை, இது தவறு, இது நடக்கக் கூடாதது, இதைச் செய்யவே முடியாது என்று பகுத்தறியும் குணம் நாம் தூங்குகையில் அதுவும் தூங்குகிறதினாலேயே நம் மூளை அதன் உச்சி அளவிற்கு யோசனை செல்கிறது. அதனாலேயே நாம் நமக்கு மீறியவைகளையும் கனவு காண்கிறோம்.

**பறவைகளைப்போல் நாமேன் பறக்கக்கூடாது?**:—உலகத்தில் அவதரித்திருக்கும் ஒவ்வொரு பிராணிக்கும் அது எவ்வாறு உலகில் உழல வேண்டுமோ அதற்குத் தகுந்தவாறே கடவுள் அதின் அவயவங்களை அமைத்திருக்கிறார். உதாரணமாக பறக்கும் ஒரு பறவையை எடுத்துக் கொள்ளலாம். அதின் ஒவ்வொரு பாகமும் பறப்பதற்குத் தகுந்தவாறே அமைந்திருக்கிறது. பறவையின் உடம்பு மிகவும் லேசாகவும், அதன் சுவாசப்பைகள் பெரிதாகவும் அமைந்திருக்கிறது. பக்ஷிகளை இன்னும் நோக்குவதற்கு அவைகளின் எலும்பு

களிலும் காற்று நிறைந்திருக்கிறது. முன்னால் கூர்மையாகவும் வளைந்தும் பக்ஷிகளுக்கு அமைந்திருப்பது பறப்பதற்கு மிகவும் சுலபமாக இருக்கும். அவைகளின் இறகுகள் தண்ணீர் ஒட்டிக்கொள்ளாதபடி நன்ருய் வர்ணம் பொருந்தியவைகளாய் கனம் அதிகமாக்க முடியாமல் அமைந்திருக்கின்றன. அவைகளின் கால்கள் மிகவும் மெல்லியவைகளாகவும் சிறியவைகளாகவும் இலேசாகவும் இருக்கின்றன. நாம் உலகில் பறப்பதற்காக உண்டாக்கப்படவில்லை; ஆனால் நடப்பதற்கும் ஓடுவதற்கும் நம்மை உண்டாக்கியிருக்கிறார். நமக்கு சிறகுகளாவது, இணைக்கப்பெற்றிருக்கும் நீண்ட கைவிரல்களாவது, இல்லை. நாம் நடப்பதற்காக உண்டாக்கப்பட்டிருக்கிறோமாதலின் நமக்கு பெரிய, நம் முழுபாரத்தையும் தூக்கிச் சுமந்து நடக்கவல்ல கால்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. நம் புத்தி சாதுர்யத்தினால் நாம் பலவகைகளிலும் ஆகாயத்தில் யந்திரங்களின் உதவியால் பறந்தாலும், நாம் பறப்பதற்காக உண்டாக்கப்படவில்லையென்றும், நம் அவயவங்கள் நடப்பதற்கும் ஓடுவதற்குமே அமைந்திருக்கின்றனவென்றும் உறுதியாகக் கூறலாம். ஆகையால் நாம் பறவைகளைப்போல் பறக்க சக்தியற்றவர்களா யிருக்கிறோம்.

குழந்தைகள் பிறந்தவுடன் ஏன் பேச முடிவதில்லை?:—இதற்கு அனேக காரணங்கள் இருக்கின்றன முதலாவதாக பிறந்த குழந்தைக்குப் பேசும்போது எவ்வாறு உதடையும் நாக்கையும் அசைத்து சப்தம் செய்வதென்கிற அனுபவம் கிடையாது. நாம் நன்ருய் வளர்ந்த பிறகும் நன்ருய்ப் பேசும்போதும் ஒரு அன்னிய பாஷையைக் கற்க முயலுகையில் அதன் சொற்கள் வாயில் நுழையாமல் நாம் அவைகள் வருவதற்காக எவ்வளவு கஷ்டப்படுகிறோம். இன்னொரு காரணம் என்னவென்றால், குழந்தையின் மூளை பேசும் சக்தியை இன்னும் முற்றும் அடையவில்லை; கேட்கும் சக்தியையும், திருப்பிச் சொல்லும் சக்தியையும் இன்னும் பூரணமாகப் பெறவில்லை. பொதுவாக, பாஷையே ஒருவர் சொல்வதைப்பார்த்து தானும் அவ்வாறு செய்ய முற்பட்டு உண்டானதே. நாம் பேச ஆரம்பிப்பதே பிறர் சொல்லிக் கேட்டு அதன்பின் அவ்வாறு பேச ஆரம்பிப்பதிலிருந்தே ஆரம்பமாகும். குழந்தை முதலில் கேட்க சக்தியற்றிருப்பதினால் அது பிறர் சொல்வதைக் கேட்டு அது மாதிரி தானும் சொல்ல முடியாததாயிருக்கிறது. இத்தியாதி காரணங்களால் குழந்தை பிறந்தவுடன் பேசச் சக்தியற்றிருக்கிறது.

S. ஸ்ரீரங்க ராஜு,
"ஜெகந்நாத பாக்", சைதாபேட்டை.



---

பத்திராசிரியர் பலருக்கும் வேண்டியவராகவும் மிக நெருங்கிய அன்பராகவும் இருக்கலாம். அக்காரணத்தாலேயே ஒருவர் அனுப்பும் வியாசத்தை மறுக்காமல் பிரசுரித்து விடுவாரென்று எண்ணிவிட வொண்ணுது. பத்திராசிரியர் வேண்டியவரா யிருந்தாலும், அவர் தமது பத்திராசிரிய ஆசனத்தில் அமர்ந்தபின்பு—நடுநிலையிலேயே நின்று, தமது கடமையைப் பழுதற் கிரமமாய்க் கண்டிப்புடன் செலுத்தவேண்டிய நிர்ப்பந்தத்திற் குள்ளாயிருக்கிறார். ஆதலின், அவர் தனது வியாசத்தைப் பிரசுரிக்கவில்லையென்று அவர்மீது கோபம் கொள்ளலாகாது, அவருக்குக் கெடுதிதேட எண்ணுவதும் சரியாகாது.




1. உன்னிடம் பிறிதொருவரின் விஷயங்களைக் கூறி உனது இரகசியங்களைத் தெரிந்துகொள்ள முயல்வோன் உன்னிடம் அறிந்தவைகளை வேருெருவரிடம் கூறக் கூசமாட்டானென்பதை நீ உணர்ந்துகொள்ள வேண்டும்.

2. ஒரு பைசா வரவுவரினும் அல்லது செலவு செய்யினும் அதற்கும் கணக்கெழுதி ஒழுங்காய் வைத்துக் கொள்வதில் அதிகமான நன்மை யுண்டு.

3. ஒரு மனிதருடன் புதிதாகக் கூடி அடுத்த ஊர் திருவிழாவுக்குச் செல்கின்ருேம். அங்கு விருப்பமுடன் ஒரு பவுண்டன் பேனவை எழு ருபாய்க்கு வாங்குகிருேம். புதிய மனிதர் தமக்கொன்று வேண்டுமென்றும் ஊர்போய்ப் பணம் தருவதாகவும் கூறுகிருர், அங்கு அவருடைய வார்த்தையை மறுக்க முடியாமல் அவருக்கும் ஒன்று வாங்கிக்கொடுக்க நேருகிறது. பின்னர், அப்பணத்தை அவரிடமிருந்து பெறுவது எப்போதோ?

4. யாரை அல்பமென நினைத்து நம்வீட்டிற்கு வந்த அவனை வாவெனக் கேளாமல் கர்வித்திருந்தோமோ அந்த மனிதனிடமே அவனுலாக வேண்டிய மிகவும் சிறு காரியமொன்றிற்கு அவன் வீட்டிற்கு நாமே வலியத் தேடிச் செல்லவேண்டியதாய் நேருகிறதுமுண்டு.

5. ஒருவர் பேசும் வார்த்தைகளிலிருந்தே அவர்கள் நம்மிடத்தில் அன்புள்ளவர்கள் தானு என்பதை அறிந்துகொள்ளலாம்.

6. ஒரு அறிவாளி முகமறியாத வேற்றூர் செல்லுவாஞயினும் அங்கு ஒருவருடன் பேச முதலில் சந்தர்ப்பம் நேர்ந்தவுடன் அவர் மூலமாகப் பல சிநேகிதர்களையும் பெற்று அவ்வூருக்கு நீண்டநாள் அனுபவமுடையவன்போ லாகிவிடுவான்.

7. உன்னுடைய சிபார்சினுலேயே பாங்கியின் மானேஜர் பதவி கிடைத்தது. ஆகிலும் இப்போதோ பாங்கியின்சொந்தக்காரர்களின் பூரண அபிமானம் ஏற்பட்டுவிட்டதனுல் நீ ஒரு வேலையாகப் பாங்கிற்கு வந்த சமயம் உன்னைத் திரும்பிப்பார்த்து ஒரு வார்த்தை பேசக்கூட மனம் வராத கர்வத்திலேறிவிட்டேன் என்ருர்—பிறகு அந்த வேலையைத் திடீரென்று இழந்த ஒருவர்.

8. நகரசபை யில்லாத ஊர்களில் சிலர் சிறிது சிறிதாக வீதி இடத்தைச் சேர்த்துக் கட்டிடங்கள் கட்டுவதால் தெரு ஒழுங்கில்லாமலிருப்பதைக் காணலாம். தெருவின் ஒழுங்கிஞலேயே வீடுகள் அழகாகத் தோன்றும். ஒவ்வொன்றிலும் ஒரு ஒழுங்கு இருந்தால்தான் அழகு தோன்றும்.

9. உனக்குக் கீழ் வேலை செய்தவன் தனது புத்தியின் வல்லமையால் இன்று உன்னிலும் மேலுத்தியோகத்தில் அமர்ந்திருக்கின்ருன். நீ இப்போது அவனிடம் சிறிது பணிந்து தான் பேசவேண்டியதிருக்கிறது. பழைய உனது எஜமானத்துவத்தை இப்போது நினைத்துப் பயனில்லை.

C. V. N. நாராயணன் செட்டியார்.

நேமுத்துப்பட்டி.

# மூத்துப்பாட்டியின் பதி பக்தி.



மூத்துப் பாட்டிக்கு என்னமோ வயது அதிகமாய்விட்டது. தன் பர்த்தாவின் மேல் தான் சின்னஞ் சிறுவயதில் வைத்த அளவிலா வாஞ்சையை இன்னும் அவள் அகற்றவில்லை. தன் கணவருக்கு வேண்டிய சிசுரூஷை செய்துகொண்டு இல்லறத்தை நல்லறமாக நடத்திக்கொண்டு வந்தாள். மூத்துப்பாட்டிக்கு ஒரு மகள் இருந்தாள். அவள் வேறொரு ஊரிற் வாழ்க்கைப்பட்டிருந்தாள். அவளிடமிருந்து அவளுக்கு உடம்பு அசௌக்கியமென்று கடிதம் வந்தது தான் தாமதம். மூத்துப்பாட்டி தன் பர்த்தாவிடம் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டுவிட்டாள். தன் மகளின் ஊர் சேர்ந்து வேண்டிய சிகிச்சைகளைச் செய்து குணப்படுத்திவிட்டு தன் ஊர் திரும்ப ஆயத்தமானுள் மூத்துப்பாட்டியும். தன் கொழுநனுக்கு மிகவும் பிரியமான மாங்காய் ஊறுகாயையும், கிச்சிலித் துவையலையும் சேகரித்துக் கொண்டு மூத்துப்பாட்டி இரயில் ஸ்டேஷனை அடைந்தாள். முன்னொரு தடவை டிக்கட்டு வாங்கும்படி ஒருவனிடம் பணம் கொடுத்துவிட்டு அவனைத் தேடித்தேடி அலைந்து கண்களெல்லாம் பூத்துப்போனது மூத்துப்பாட்டிக்கு அசரீரிபோல் எப்படியோ தோன்றிவிட்டது. பொம்மனாட்டிகள் எதற்காக டிக்கட்டு வாங்கக் கூடாதென்று கூட்டம் குறைந்தவுடன் டிக்கட்டு கொடுக்கும் ஜன்னலை நெருங்கி,

"அப்பா ஒரு டிக்கட்டு கொடேன்" என்றாள் பாட்டி.

"எந்த ஊருக்குப் பாட்டி?" என்றார் அவர்.

"ஊர் பெயரில் என் பர்த்தா பெயர் வருகிறதே; நானெப்படியப்பா சொல்வேன். என் பர்த்தா கேட்டால் என்ன நினைப்பார்?" என்றாள் பாட்டி அம்மாள்.

"பின் நானெப்படி அம்மா உங்கள் ஊரை அறிவது; உங்களுக்கு எழுதத் தெரியுமா?"

"நான் கட்டையிலேபோக. எழுதத் தெரிஞ்சா நானேன் இப்படி இருக்கேன். நானென்ன செய்யப் போகிறேன்" என்று கையை முறித்துக்கொண்டாள் மூத்துப்பாட்டி.

இதற்குள் இரண்டு மூன்று பேர்கள் டிக்கட்டுகள் கேட்டார்கள். அவர்களுக்கு டிக்கட்டு கொடுத்துக் கொண்டே வந்தார். அப்போது மூத்துப்பாட்டி தன் மூளையை உபயோகிக்காமலில்லை. எவர்களாவது தான் போகப்போகும் ஊரைச் சொல்கிறார்களா என்று கவனித்தாள். ஒருவரும் சொல்லக்காணோம். பின்னும் அவளுக்குச் சாவகாசம் கிடைத்தது.

"அப்பா, நானென்ன செய்வேன் நீயாவது சில ஊர்கள் பேர் சொல்லேன்" என்று மூத்துப்பாட்டி தைரிய தொனியுடன் கேட்டாள். அவர் சரமாரியாகப் பல ஊர்களை அடுக்கிறார். ஐயோ பாவம்! அதில் அவள் ஊர் வரவே இல்லை.

"பர்த்தாவின் பெயரை மாத்திரம் விட்டு விட்டு மீதியைச் சொல்லுங்கோ பாட்டி, என்று கருணை பொருந்திய டிக்கட்டு கொடுப்பவர் கேட்டார்.

"எனக்கு இப்போ ஒரு யுக்தி தோன்றிச்சு; அப்பா சொல்றேன் வா; என்று பாட்டி மிருகத்தில் பெரிய மிருகம் சொல்லு என்று பரீக்ஷை வைக்க ஆரம்பித்தாள். "சிங்கம்" என்றார் டிக்கட்டு கொடுப்பவர். "இல்லை" என்றாள் பாட்டி. பின்னும் சொல்லச் சொன்னாள். "காண்டா மிருகம்" என்றார் அப்பாவி மனிதர். "அதுவும் இல்லை கலியாண திருநாள் உற்சவகாலங்களில் கொண்டு வருகிறார்களே, பெரிய மிருகம் அதைச் சொல்லு" என்று ஒரு புதிர்போட்டாற்போல் கேட்டாள் பாட்டி. தெரிந்ததம்மா "ஆனையா" என்றார் டிக்கட்டு கொடுப்பவர். "ஆமா அப்பா மறந்துவிடாதே அத்துடன் தாண்டவபுரம் சேர்த்துக்கோ, ஒருடிக்கட்டு கொடு" என்றாள் பாட்டி. அப்போது தான் புதிர் எல்லாம் விடுத்து "ஆனைத் தாண்டவபுரமா என முடித்தார் டிக்கட்டு கொடுப்பவர்" "ஆம்" என்றாள் குதூகலத்துடன் பாட்டி. "அப்போது தங்கள் கணவனாரின் பெயர் ஆனை யப்பனோ?" என்று வினவினார். "ஆமாம் அப்பா. உனக்கு நாலைந்து ஆம்பளைப்பிள்ளை பிறந்து எல்லாரும் சுகமாக இருக்கணும்" என்று வாழ்த்திவிட்டு டிக்கட்பெற்று இரயிலில் ஏறி ஊர்வந்து சேர்ந்து தன் கணவனாரிடம் நிகழ்ந்ததை நிகழ்ந்தவாறு கூறினாள். தன் மனைவியின் பதி பக்தியைக் காதாரக்கேட்டு உளமகிழ்ந்தார் அவரும். பின் எங்காவது போவதென்றால் ஊரின்பெயரை ஒரு கடிதத்தில் எழுதிக்கொடுக்கச் சொல்லி எடுத்துக்கொண்டு தான் போவாள் முத்துப்பாட்டி. வயது தள்ளாடும் காலம் வந்தாலும் முத்துப் பாட்டியைப்போல் பதிமேல் அவ்வளவு பக்தி இருக்கவேண்டும். ஆனால், இப்போது எத்தனையோ குடும்பங்களில் பெண்கள் எதிர்க்கிறார்கள். அதனால் அம்மாதர்கள் அடையும் லாபமென்னவோ!

S. ஸ்ரீரங்கராஜு,

"ஜெகந்நாத பாக்", ஸைதாபேட்டை.

---

தனக்கு வேறுகதியில்லை, தாங்களேகதி என்று ஒரு உத்தமன் ஓலமிடுகையில் அதை உண்மை யென்று கண்டவுள்ளம் உடனே ஆதரிக்கவும் முற்பட்டுக்கொள்கிறது.

---

அனுபவம் என்பது வெகுபெரிது. ஒரு காரியத்தைச்செய்து அனுபவப் பட்டவனுக்கு அது இவ்வளவு காலத்தில் முடியும் என்பது தெரியும். தான் தாமதித்து ஒரு காரியத்தைச் செய்யினும், அந்த முடியவேண்டிய காலத்துக்குள்ளாகவே அது முடிந்து தீரும்படி செய்யக்கூடிய அறுகறுப்புத் தன்மையும் அனுபவிக்க உண்டு.

---

இருவரும் இட்டிலிக்குத் தொட்டுக்கொண்டு புசிக்க ஒரு கிண்ணியில் குழம்பைக் கொண்டுவந்து வைத்தால், இருவரும் மற்றவர்க்கு எங்கு இல்லாமலாகிவிடுகிறதோவென்று கொஞ்சம் கொஞ்சமே குழம்பைத் தொட்டுக்கொண்டு புசிக்கிறார்கள். இருவருக்கும் தனித்தனி கிண்ணியில் வைத்துவிடில் இந்த விசாரமில்லை.






# தீண்டாமையின் ஓட்டம்!



அது தாண்டா அப்பா! இப்போது பெரிய முழக்கம்! இனி தீண்டாமை தொலைய வேண்டியதே யென்று மகாத்மாஜீயின் தொண்டர்கள் சொல்லுகிறார்கள்! அதற்காகப் பிரசாரம் ஓயாமற் செய்து வருகிறார்கள்! இவர்களெல்லாம் ஆறுபோகிற போக்கிலே, காலசக்கரம் சுழலுகிற வழியிலே செல்லுகிறவர்கள்! இனி, வைதீக ரத்தினங்களோ தீண்டாதார் கோவிலுக்குள் போகவே கூடாதென்றும், அது ஆகமவிதிகளுக்கு விரோதமென்றும், அதனால் கோயில்களின் பரிசுத்தம் கெட்டுவிடுமென்றும், அங்கே விக்கிரகங்களின் மீதுள்ள "கடவுளின் ஆவி" பறந்து போய்விடுமென்றும் எதிர்க்கிறார்கள்! எதிர்ப்பதுடன்கூட, அதிலே தங்களுக்கு ஒரு பெருமையும், ஒருமுழ நீளம் உயர்வையும் காட்டிக்கொள்ளுகிறார்கள்! தாங்கள் வேதசாஸ்திரங்களை யெல்லாம் கரைத்துக் குடித்த மேதாவிகள் போலவும் நடிக்கிறார்கள்! உள்ளே புகுந்து பார்த்தால் நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பதே முக்கால்வாசி பேர்கள் அந்த "நான்கு வேதங்கள்" என்பதையே கண்ணால் கண்டவர்களல்ல. அதில் ஒரு எழுத்து தானும் தெரிந்தவர்களல்ல. என்னவோ அங்கே ஒரு வரியும், இங்கே ஒரு வரியுமாய்த் தப்பும் தவறுகளுமாக்க குருட்டுப்பாடம் பண்ணிய புள்ளிகளாகவே இருப்பார்கள்! இடைக்காலத்தில் எழுந்த புஸ்தகங்களைப் படித்தவர்களாகவே பெரும்பாலார் காணப்படுவர். கோயிலிலே பரிசாரக வேலை செய்துகொண்டு, அத்துடன் வெளியிலும், கச்சேரிகளிலும் உத்தியோகம் வகிக்கும் வைதீக வித்துக்கள் எத்தனையோ பேர்! தாங்கள் உத்தியோக வேஷத்திலிருக்கையில் தீண்டாதாரைத் தொட்டுக்கொள்வார்கள்! கோயிலுக்குள் நுழைந்து வைதீகவேஷமாகி விடும்போது ஓ! தீண்டாத ஜாதியென்பார்கள்! நம்ம வைதீகர்களில் அநேகர் எவனெவனோ ஜலம் ஊற்றி அடைத்த சோடா லெம்னெட் புட்டிகளை நன்றாகக் குடிப்பவர்கள்தான்! சீமையிலிருந்து வருகிற பிஸ்கோத்—பெப்பர்மிட்டுகளை வாய் நிறையத் தின்பவர்களே! மாட்டிறைச்சி, பன்றியிறைச்சி இவற்றின் சாரம் சேர்ந்ததென்றும், தேகத்துக்குப் பலம் தருபவைகளென்றும் சொல்லப்படுகிற சீமை மருந்துகளை யெல்லாம் உயர்குலத்தாரே முக்கால்வாசி வாங்குகிறார்களே! வைதீகப் பெரியார்கள் தான் இலவச நுழைப்

பிலே காசு இல்லாமல் மருந்து கிடைக்கிற ஆஸ்பத்திரிகளுக்குப் பெரும்பாலும் போகிறவர்கள்! அங்கே ஹரிஜனத்தைச் சேர்ந்த காளிமுத்து தொட்டுக்காய்ச்சிய ஜலத்தை மருந்தில் ஊற்றிக்கொடுத்தால் வெகு பிரியமாய்ப் பெற்றுக்கொண்டு குடிப்பார்கள்! ஆனால், அந்தக் காளிமுத்துவைமட்டும் தொடமாட்டார்கள்!

ஃ

ஹரி ஜனத்தைச் சேர்ந்த ஒருவர் பெரிய பணக்காராக இருந்தால் இந்த வைதீக உயர்குலத்தார் அவர் மீது பாட்டுகள் பாடிப்போய் பரிசு பெறுவார்கள்! தக்ஷிணைகளுக்கும் ஸன்மானங்களுக்கும் காத்துக்கிடப்பார்கள் இன்னும் அவரிடத்திலே குமாஸ்தாவாகத் தாங்களும், தங்கள் மக்களுமாகக் குந்திக்கொண்டு சம்பளம் பெறுவார்கள்! பணம் கிடைக்குமென்றால் எந்த வேலையும் செய்வார்கள்! இவைகளுக்கெல்லாம் சாஸ்திரங்கள் இடங்கொடுக்கிறதாவென்று விகடன் கேட்கிறேன்! அவைகளெல்லாம் காலத்தையனுசரித்த மாறுதல்கள், கலியின் சுபாவம் என்பார்கள்! ஹரி ஜனங்களைக் கோயிலுக்குள் போகவிடுவதை மட்டும் என் காலசக்கரத்தின் மாறுதல் என்று கொள்ளக்கூடாதோ? இதுவரைக்கும் ஆங்காங்கு அநேக கோயில்கள் ஹரிஜனங்களுக்காகத் திறந்துவிடப்பட்டிருப்பதிலே என்ன அனர்த்தங்கள் நேர்ந்து போய்விட்டன? கோயிலிலேயிருந்த சாமிகள் ஓடிப்போய் விட்டனவா? அவற்றின் பரிசுத்தம் கெட்டுப்போய்விட்டதா? கோயிலிலே பரிசாரகம் செய்வோரிற் பலர் எவ்வளவோ அக்கிரமஸ்தர்களாய் இருக்கிறார்கள்! யாத்திரீகர்களிடமிருந்து பணம் பிடுங்குவதில் பெரிய சமர்த்தர்களாயிருக்கிறார்கள்! இன்னும் அவர்களைப் பொல்லாத வழிகளிலெல்லாம் இழுத்துவிடுவோராயுமிருக்கிறார்கள்! எவ்வளவோ கபடம், காமம், மோசங்களெல்லாம் செய்வோராயிருக்கிறதுமட்டுமல்லாமல், அதுவே ஒரு ஜீவனார்த்தமாகவும் கொண்டு வயிறு பிழைப்போராகவும் இருக்கிறார்கள்! இவர்கள் செய்கிற அக்கிரமங்களுக் கெல்லாம் கோயில் விக்கிரகங்களை விட்டுப் பறந்துபோகாத கடவுளின் ஆவி, ஹரிஜனங்கள் கோயிலுக்குள் நுழைவதிலே மட்டும் நீங்கிப்போய்விடுமா? இவையெல்லாம் பிடிவாதக் கதைகள்! கோயிலில் எழுந்தருளியிருக்கிற தெய்வத்தை உண்மைத் தெய்வமாக, ஸர்வலோக பிதாவாக, ஸர்வேச்வரனாக இவர்கள் நினைத்திருந்தால், ஹரிஜனங்கள் கோயிலுக்குள் போகக்கூடாதென்ற குறுகிய புத்தி இவர்களுக்கு உண்டாயிராது! கடவுள் படைத்த உலகில் வாழுகிற ஹரிஜனங்கள்—அந்தக் கடவுளைச் சேருதற்குரிய மதமாகக் கருதப்படுகிற ஹிந்து மதத்திலேயே இருக்கிற ஹரிஜனங்கள்—அந்த ஹிந்துமதக் கடவுள் வீற்றிருக்குங் கோவிலுக்குள் போகக்கூடாதென்று இந்த வைதீகப் பருப்புகள் தடுப்பார்களேயானால், அந்த ஹிந்து கடவுளின் ஈசுவரத் தன்மையிலும், அதன் பரிசுத்தத்திலும் சந்தேகங் கொண்ட குறுகிய மனத்தினர்களாகவே இருக்கிறார்களென்று தான் கொள்ளவேண்டும்! ஹரி ஜனங்கள் தேகப் பரிசுத்தமற்றவர்களாயிருக்கிறார்களென்றால், இந்த வைதீகப்

---

ஒரு குறிப்போ அரிய வசனமோ உன் மனதில் தோன்றியவுடன் எழுதிவைத்துவிடுவது நலம், பின்னர் எழுதுவோமென நினைப்பின் அதுபோன்ற பொறுக்கி யெடுத்த அழகிய வார்த்தைகள் உனது இருதயத்தில் உதயமாகுமா என்னும் விஷயம் சந்தேகமானதே. C. V. N. N.

பருப்புகள் மனப் பரிசுத்த மற்றவர்களாய்க் கிடக்கிறார்களே! மனத்தில் உண்மையான பரிசுத்த மிருப்பின் ஹரி ஜனங்களைத் தீண்டாதாரென்று ஒதுக்கிவிடவும், கோயிலுக்குள் செல்ல மறுக்கவும் புத்திபோகுமா?

ஃ

எல்லாம் சிலகாலத்திற்கே இந்தக் குழப்பமென்று விகடன் நினைக்கிறேன், பிறகு யாவும் சரிப்பட்டு ஹரிஜனங்கள் கோயிலுக்குள் செல்வதும் சாதாரணமாகிவிடுகிற காலமும் இனி பிறகு வந்து சேர்ந்துவிடும்! ஆதியிலே, இங்கிலீஷ் பாஷையை நீசபாஷையென்று பழித்த வைதீகங்கள் பிறகு தங்களின் சந்ததிகளையெல்லாம் அதிற் புகவிட்டு அடிப்பங்கரை வரையில் ஏ. பி. ஸி. டி. மயமாக்கிவிட வில்லையா? இப்போது கடல் யாத்திரை செய்து திரும்பிவரவில்லையா? ஆங்கிலத்துரைகளுடன் கூடி உண்ணவில்லையா? கவர்னர் முதலியோர் வரும்போது கோயில் சாமிகளின் நகைகளையும், வாகனங்களையும் சிங்காரித்து வைத்து அவர்கள் தொட்டுப் பார்த்துக்கொள்ளும்படிக் காட்டவில்லையா? எத்தனையோ வைதீகப் பருப்புகள் தங்களின் மதச் சண்டைகளையும், Y. U. நாம அடையாளச் சண்டைகளையும் தீர்த்துவைக்கும்படி லண்டனில் பிறந்து வளர்ந்த ஆங்கிலத்துரைமார்களின் நியாயத் தீர்ப்புக்கு அவர்களின் காலடியிலேயே காத்துக் கிடக்கவில்லையா? கோழி முட்டை சேராத கிறிஸ்மிஸ் கேக் கிடையவே கிடையாது. அந்தக் கேக்குகளையும் பஞ்சமர் பிசைந்து தயாரித்துள்ள ரொட்டிகளையும் பல வைதீகர்களும், அவர்களின் மக்களும் உண்ணவில்லையா? எல்லாம் காலம் செல்லச் செல்லச் சரியாய் விடுமென்றே விகடனுக்குத் தோன்றுகிறது! இதற்கிடையிலே சிறு குழப்பம் நடப்பது சகஜந்தான்! அது கொஞ்ச நேரத்துக்குத் தான்!

ஃ

ஞானிகளுக்குக் கோயில்களும் விக்கிரக வணக்கமும் தேவையில்லையாயினும், அவர்கள் எங்கணுமே கடவுளின் ஸ்வரூபத்தைத் தரிசிப்பவர்களாயினும், அன்னோர் ஆங்காங்குள்ள திருக்கோயில்களுக்குச் சென்று, அக்கோயில்களிலே ஈச்வர ஸ்வரூபத்தைத் தரிசித்து மனமுருகிப் பாடி வாழ்த்திச் சென்றுள்ளார்கள். இவ்விதம் பாடல் பெற்ற புராதன ஸ்தலங்கள் இந்தியா முற்றிலுமுள்ளன, அந்த மஹா ஞானிகளுக்கு சமத்வமாய் நிற்கும் மஹாத்மா காந்தியடிகள் ஹரிஜனங்களை ஆலயங்களுக்குள் விடவேண்டுமென்று மன முருகிப் பிரார்த்திக்கும்போது, அந்தப் பிரார்த்தனைசக்தியின் வேகத்தை எதிர்க்க எவராலுமாகாது! எந்த வைதீக வித்துக்களாலும் முடியாது! மற்ற தேசங்களில் ஜனஒழுக்க விதிகளை எவரெவரோ தோன்றி ஏற்படுத்தினரென்றாலும், இந்தியாவைப் பொறுத்துமட்டில் ஞானிகளே அவ்வேலையைச் செய்திருக்கிறார்கள். முற்றும் துறந்த மகரிஷிகளே ஜனஸமூகக் கிரமங்களை நிர்மாணித்து அதை யனுஷ்டானத்திற்கும் கொண்டுவந்தார்கள். அவ்விதமே, இப்போதுள்ள இந்த உலகிலே மஹாத்மா காந்தியடிகளுக்கு சமத்வமான ஞானி இன்னொருவரிருக்கவில்லை! அவர் வாக்கே தெய்வவாக்கு! அவர் வாக்கின்படியே யாவும் நடக்கும். அந்த வாக்கை எதிர்த்து நின்று ஹரிஜனங்களைக் கோயில்களுக்குப் போகவிட மறுக்கும் வைதீகக்கட்சியாரின் வாதம் நீடித்து நில்லாது, வெல்லாது, செல்லாது! ஹரிஜனங்கள் பெரிய க்ஷேத்திரங்களில் தரிசனம் செய்வதினால் ஒழுக்கம் திருத்தி எவ்வளவோ சீர் அடைவார்கள்.

அதைத் தடுப்பது தருமமல்ல. நம்மைப்போல் மனித ஜன்ம மெடுத்து நமது ஹிந்து மதத்திலிருப்போரை நமது கோவில்களுக்குள்விட மறுத்து அன்னிய மதங்கட்கு ஓடும்படி செய்வது மஹா பாவமும் துரோகமுமாகும்.

ஃ

ஹரி ஜனங்களைக் கோயிலுக்குள் விட மறுக்கும் வைதீக ரத்தினங்கள் கால இயல்பு தெரியாதவர்கள்! குண்டு சட்டிக்குள் குதிரை யோட்ட நினைப்பவர்கள்! ஒரு புது ஜனக்கட்டுப்பாடும், ஒரு புதிய ஜனசக்தியும் தற்காலத்துக்குத் தேவை யென்பதை அறியாதவர்கள்! எழுகோடி ஹரி ஜனங்கள் ஹிந்து மதத்தை விட்டு விலகி விட்டால் ஹிந்து மதம் எவ்வளவு க்ஷீணித்துப் பலமற்று விடும்என்பதை எண்ணாதவர்கள்! ஜனங்களுக்காக சாஸ்திரங்களே தவிர, சாஸ்திரங்களுக்காக ஜனங்களல்ல! பூர்வத்திலே புத்திரசந்தான மில்லாதவர்கள் தர்ம சந்தானமாக, தகுந்த ஞான வைராக்கிய முன்னோரைச் சேர்ந்து சந்தானம் பெற்றுக் கொள்ளலாமென்ற விதியிருந்தது. அந்த விதியின் படியே தான் பஞ்ச பாண்டவர்கள் பிறந்தார்கள்! இப்போது அந்த விதியை வைதீகர்கள் அனுஷ்டிக்கிறார்களா? இவ்விதம் எத்தனையோ விதிகளும் சாஸ்திரங்களும் காலசக்கர வேகத்தில் மறைந்து போயின! அவ்விதமே, கோயிலுக்குள் ஹரி ஜனங்களைவிட மறுக்கும் எதிர்ப்புகளும் நாளடைவில் மறைந்து விடத்தான் வேண்டும்!

ஃ

எப்போதோ ஒரு காலத்தில் எதற்காகவோ ஒரு பெரும் வகுப்பினரை ஒதுக்க நேர்ந்திருந்தாலும், அதை எத்தனையோ ராஜ்ய ஆட்சிகளும் காலங்களும் ஆசாரணைகளும் மாறிப் போன இக்காலத்திலும் சாஸ்வதமாக நீடித்திருக்கவேண்டுமென்று வாதாடுவது சாத்தியமல்ல; அது வளருகிற அறிவுக்குப் பொருந்தியதுமல்ல. வைதீகரென்போர் பெரும்பாலும் வைதீகமே அற்றுப்போய் பார்வைக்கு மட்டும் பழய வைதீக வேஷத்துடன் கூடியவர்களே தவிர, அக்கினியின் மத்தியில் நின்று தவ ஜெபங்கள் செய்பவர்களல்ல. ஆனால், பேச்சில் மட்டும் தாங்கள் தவஞ்செய்யும் ஞானிகள் போலவே நடித்து ஆலயப் பிரவேசத்தை எதிர்க்கிறார்கள்! இந்தப் பருப்பு இனி வேகாதென்று எதிர்காலம் சொல்லுகிறது! இதோ பரோடா சமஸ்தானத்திலும், காஸ்மீர சமஸ்தானத்திலுமாக ஹிந்துக்களுக்குள்ள எல்லாக்கோவில்களையும் ஹரி ஜனங்களுக்கு ஜாதி பேதமின்றித் திறந்து விடும்படி ஸமஸ்தான கவர்ன்மெண்டுகள் உத்திரவு செய்து விட்டன! அதோ சென்னைச் சட்ட சபையில் டாக்டர் சுப்பராயன் கொண்டுவந்த தீண்டாதார் ஆலயப் பிரவேசத் தீர்மானம் ஒருவருடைய எதிர்ப்புமின்றி நிறைவேறி விட்டது. இதற்கு வைதீகர்கள் என்ன பதில் சொல்வார்களோ? பிராமணனை ஒரு தேவதையாகப் பாவிக்கும்படி சாஸ்திரம் சொல்லுகிறது. அந்தப் பிராமணன் ஒரு கொலையைச் செய்தால் சாஸ்திரம் ஜாடையாக விட்டு விடுகிறது. ஆனால், இங்கிலீஷ் சட்டமோ கொலை செய்த பிராமணனுக்குத் தூக்குத்தண்டனை விதிக்கிறது! எனவே, பழய சாஸ்திரங்களைப் பற்றிப் பேசுவதிற் பயனில்லை. சட்டமும், பிரஜா உரிமையுமே முக்கிய விஷயம். அந்த சட்டம் தீண்டாதாரின் ஆலயப் பிரவேசத்தை ஆதரித்து விட்டது. இதன் மத்தியில் ஹரிஜனங்களுக்கு விகடன் ஒரு வார்த்தை சொல்லுகிறேன்! தாங்கள் பரிசுத்த மற்ற தாழ்ந்த இனத்தவர்களென்று ஹரி ஜனங்கள் எண்ணுகிற மூட நினைவு

களை அவர்கள் விட்டு விடவேண்டும்! தங்களைத் தாங்களே தாழ்த்திக் கொள்வது பெரிய பலஹீனமாகும்! தங்களின் இழிந்த வழக்கங்களையும், இறந்த பிராணிகளைப் புசித்தல் போன்ற கேவலச் செய்கைகளையும், அசுத்தமாகக் கிடப்பதையே தங்களின் வழக்கமாகக் கொண்டிருக்கிற அனுச்சாரங்களையும் அடியோடு விட்டு விடவேண்டும். சண்டாள நிலையுள்ளவர்கள் எந்த ஜாதியிலும் இருக்கிறார்கள். அந்த சண்டாளத் தனங்களைத் தாங்கள் கொள்ளாமல் நித்தமும் குளித்து முழுகி பரிசுத்த தேகத்தோடும், தூய மனத்தோடும், சுத்தமான உடைகளுடனும், கல்வி கைத்தொழில் இவற்றோடும் பரிமளப்பட்டு உயர்வதற்கு ஓயாமல் முயற்சிக்கவேண்டும். இது ஹரிஜனங்கள் செய்யவேண்டிய சங்கதி. கடைசியில் எதற்கும் ஒரு முடிவுகாலம் உண்டாதலால், அந்தக் காலத்தை விகடன் எதிர்நோக்கி நிற்கிறேன்! எதிலும் அவசரப்படுவது கூடாது. கொஞ்சம் பொறுத்தே போகவேண்டும். ராம்! ராம்! சுபம்! ஞ! சுவாஹா!

# மூளைக்கு விருந்து.

(இரு பொருள் கொண்ட ஒரு பதம்.)

1. அப்பனிருந்தால் அப்பனை அறியலாம்: (பிதா; ஈசன்.)

2. அம்மானை அம்மானுகப் போகும்படி ஏவினுன் இலங்கை வேந்தன். (மாரீசன் ; அழகியமான்.)

3. ஆதியைத் தொழ ஆதியிலிருந்தே பழகு. (ஈசன்; சிறுவயதிலிருந்து.)

4. ஆனியில் செய்யும் காரியம் ஆனி ஆகாது; (ஆனிமாதம்; கெடுதல்)

5. இல்லாள் என்பவன் இல்லாளல்ல. (இல்லையென்று சொல்பவன் ; இல்லறம் நடத்தும் பெண்.)

6. இராவணன் இராவணனோடு யுத்தம் புரிந்து வெற்றிபெற்றான். (இரா + வண்ணன் = நீலநிறம் போன்ற இராமன் ; இராவணன்.)

7. ஐயரை என்னுஞ் சொல் ஐயரை யல்ல. ($5x\frac{1}{2}=2\frac{1}{2}$, ஐந்து அரை); பிராமணர்.)

8. ஒளியுள்ள யிடத்தில் ஒளித்தல் இயலாது. (பிரகாசம் ; மறைதல்.)

9. கடம்பைக்கொண்டு கடம்பனைப் பூசி. (கடப்பை மலர் ; சுப்ரமண்யர்.)

10. கம்பத்தில் கட்டுவது கம்பமா? (தூண் ; யானை.)

11. கவிபாடுவது கவிகளின் இயற்கை. (செய்யுள் ; வித்வான்.)

12. கஜத்தின் மேல்போட கஜத்துணி போதாது. (யானை ; ஒரு கஜம் துணி )

13. காளையை அடக்கக் காளையே தேவை. (எருது ; வலிமிக்கவாலிபன்)

14. காசிக்குச் செல்ல காசி வேண்டும். (ஓர்புண்ணியஸ்தலம் ; பணம்.)

15. காயத்தில் காயம் பட்டான். (சரீரம் ; அடி.)

16. காரில் கார் அறுத்தான். (கார் காலம் ; கார்நெல்.)

17. காடியில் சென்றால் காடி அருந்தலாம். (வண்டி ; கள்)

18. குசவன் சேய்யாதது அங்குசமே. (ஓர் ஜாதி ; யானையை நடத்துங் கருவி.)

19. குடித்தனத்தைக் கெடுப்பது குடித்தனமே. (இல்வாழ்க்கை ; கட்குடி.)

20. கொக்கு கொக்கில் வசிக்கிறது. (கொக்கு ; மாமரம்.)

21. கொள்விலை ரூபாய் 1க்கு 8 படி என்பது அதன் கொள்விலையே. (கொள் ; வாங்கினவிலை.)

22. சிரகமில்லா வீடு சிரகமாகாது. (சிரகம் ; சிறந்த வீடு.)

23. சிதை சிதையில் கண்டெடுக்கப்பட்டாள். (சீதை ; படைச்சால்.)

24. சுத்தியால் சுத்தி அடித்தான்; (ஓர் இருப்புக்கருவி ; வளைந்து )

25. சாக்கு வாங்க சாக்கு ஏன்? (கோணி ; வீண்காலம்.)

26. தடத்தின்கண் உள்ளது தடம். (வழி ; குளம்.)

27. நூலைக் கட்டுவது நூல். (சாஸ்திரம் ; நூல்கயிர்.)

28. படி மேல் படி வை. (வாயிற் படிர் அளக்கும் கருவி.)

29. பாழியை பாழிடத்தில் வெட்டியதால் பயனில்லை. (சிறுகுளம் ; பாழான இடம்.)

30. பாதையில் செல்லாததால் பாதைப்பட்டான். (வழி ; கஷ்டம்.)

31. பரி யணியும் பரியை மக்கள் அணிவதில்லை. (குதிரை ; ஆபரணம்.)

32. பூவை விரும்புமோ பூவை. (புஷ்பம் ; ஓர்விதப் பறவை.)

33. பூனைக்கும் பூனைக்குங் கால்கள் உண்டு. (தேவி ; பூனை.)

34. பெருங்காயத்திற்கு இன்றியமையாதது பெருங்காயமே. (பெருமை மிக்க சரீரம்; அல்லது பெரிய சரீரம்; பெருங்காயம்.)

35. மதிகொண்டு மதிலயக்கான். (புத்தி ; சந்திரன்.)

36. மறையவர் ஓதுவது மறையே. (பிராமணர்; வேதம்.)

37. மூக்குண மகற்றின் முக்கண்ணனைக் காணலாம். (காமம், வெகுளி மயக்கம் ; ஈச்வரன்.)

38. வைகை, வைகையில். (கையை வை ; மதுரையிலுள்ள நதி.)

39. வேழத்தைத்தின்ன வேழமே தேவை. (கரும்பு ; யானை.)

40. கர்னம் கர்ன மடித்தான். (கணக்கப்பிள்ளை ; குண்டாங்கர்ணம்)

D. இரத்தின முதலியார்.

## ஓட்டையானாலும் காரியத்தை சாதித்துக்கோள்

ஓட்டைச்சட்டியா யிருந்தாலும் கொழுக்கட்டை வேகவேண்டியதுதானே? ஓட்டை விளக்காக இருந்தாலும் ஒட்டுபோட்டு இன்னும் சிலநாளைக்கு எரிக்கலாமல்லவோ? ஓட்டைப் பாத்திரமாயிருந்தாலும் செட்டியார் அதை விற்காமலா போவார்? செல்லாத ஓட்டை ரூபாயானாலும் அது எவர் கைக்காவது மாறுமலா போகும்? ஓட்டைக் குடமும் ஒருசமயம் ஜலம் கொண்டுபோவதற்கு உதவும். ஓட்டைப் பேனாவாக இருந்தாலும் அவசரத்துக்கு அதை உபயோகம் செய்ய வேண்டியதுதானே! ஓட்டை வாழ்வானாலும் செய்யவேண்டிய கடமைகளை நிறுத்த முடிகிறதா? ஓட்டை ஒடிந்தாலுங்கூட அதைக்கொண்டும் காரியம் சாதிக்கவேண்டியதுதான். ஓட்டைக் குடித்தனப் பெண்ணானாலும் மனைவியாக வந்தபின்பு அவளைக் கொண்டுதானே காரியங்களை நடத்தவேண்டும். ஓட்டையென்று எல்லாவற்றையும் எறிந்துவிட முடிகிறதா? ஓட்டை ஒடிந்துபோனால் அதிக விசாரமில்லை. நன்றாயிருந்தது ஒடிந்தால்தான் வாதனை அதிகம்.

# சிறுமணித்திரள்

(397-ம் பக்கத் தொடர்ச்சி.)

1049. மரணாவஸ்தையிலிருக்கும் ஒரு ஸ்திரீக்கு—தன் காலத்திற்குப் பிறகு தன் நாயகனுக்குப் புது மனைவியாக வரப்போகிறவளால் எங்கு தன் மக்கள் ஹிம்ஸிக்கப் படுவரோ வென்ற விசாரமே பெரியதாயிருக்கின்றது.

1050. "என் குழந்தைகளைச் சத்ருருக்கள் வசமாவது ஒப்பிவிப்பேனே தவிர, எனக்குப் பின்னிட்டு வருகிற அநுகூல சத்ருருவான சக்களத்தியிடம் ஒருபோதும் விடமாட்டேன்."

1051. எவ்வளவு கற்றிருந்தும் என்ன பிரயோஜனம்? அதை உபயோகப்படுத்தத் தருணமும் தனக்கு இனியன கூறுவோரும், தன் பாடுகளுக்கு அநுதாபப் படுவோரும் இல்லாத இடத்தில் என்ன சந்தோஷத்தைத் தான் அநுபவிக்க முடியும்?

1052. மனுஷ்யனைத் தவிர மற்ற ஜீவகோடிகளுக்கு அலுப்பும் தெவிட்டுதலும் உண்டாவதில்லையே யெனில், அவைகள் யாவும் தரையை நோக்கி நடப்பதனால், இவ்வுலகத்துக்குட்பட்ட பொருளைமட்டும் தேடி அவற்றுடன் திருப்தியடைய வேண்டியவைகளென்றும் ஏற்படுகிறது.

1053. மனிதனோ தலை நிமிர்ந்து மேல் நோக்கி நடப்பதனால், இவ்வுலகத்திற்கு மேற்பட்ட ஒன்றைத் தேட வேண்டியவனென்றும், அங்ஙனம் மேற்பட்ட ஒன்றினை அவன் அடைந்து நற்கதியுறும் பொருட்டாகவே பகவான் அவனுக்கு வாழ்க்கையின் இடை இடையே தெவிட்டுதலையும், அலுப்பையும், சோதனா துக்கங்களையும், உண்டுபண்ணித் திருத்துவிக்கின்றாரென்றும் உணரவேண்டும்.

1054. விவாகத்தின் முக்கிய நோக்கமும்—புத்திரப்பேற்றின் பிரதான லக்ஷ்யமும்—ரதிபோகாதிகளின் ஆழ்ந்த திருஷ்டியும்—ஒரு மனுஷ்யனுக்கு வாழ்க்கையில் தெவிட்டுதல் உண்டாகாமலிருப்பதற்காகவே, தான் உள்ளம் சலித்துவிடா திருப்பதற்காகவே, மேற்சொன்னவை யெல்லாம் ஈசுவர நியதியின்படி ஏற்படுத்தப் பட்டன.

1055. மனுஷ்ய வர்க்கத்தின் பிற்கால நிலைமை என்ன கேட்டிற்குள்ளானபோதிலும் சரி, ஆரம்பத்தில், அது உலகில் தோன்றிய நாளில், குழந்தைகளாயிருந்து விளையாடிய சந்தர்ப்பத்தில், தன்னைச் சூழ ஒரு தெய்வப் பிரபையைப் பெற்று மகா தேவகாந்தியாய் ஜ்வலித்துக்கொண்டிருந்ததென்பதை எவர்களும் மறக்க முடியாது.

1056. குழந்தைகள் பேராபரணம், மாற்றில்லாத தங்கம், மாசில்லா மாணிக்கம், விலையில்லா ரத்தினம், விசித்திரப் பொற்பதுமை, தெவிட்டாக் கனி, கட்டிக்கரும்பு, காய்ச்சா மணப்பால், மங்காத மாமணி, வாடா மலர் மாலை, குலம் விளங்கும் திலகம், கடவுள் கொடுத்த பெரும் லாபம் அன்றோ?

P. G. குலசேகரன்,

"மனோரஞ்சனி விலாஸ்" ராயபுரம்.

# பிரபஞ்ச தரிசனம்

## நாகரீக வினோதங்கள்.



தத்தமக்குத் தெரிந்தவைகளையே நாகரீகமெனக் கொள்கின்றனர். ஒருதேசத்தின் நாகரீகம் பிறிதோர் தேசத்திற்கு நூதனம். ஒரு காலத்து நாகரீகம் பிரிதோற் காலத்திற்கு அநாகரீகமா?

ஒரு மரபினரின் பழக்கவழக்கங்களையே இன்னொரு மரபினர் நாகரீகம் என்றாவது அநாகரீகம் என்றாவது கருதுகின்றார்கள்.

காலதேச இயல்புக்கேற்ற விதமான பழக்கவழக்கங்களை அநுசரித்து வருதல் நமது நாட்டு முற்கால நாகரீகமாக இருந்தது. இப்போது காலத்திற்கேற்ற கோலமாகக் கண்ட பாவனையிற் கொண்டதை முடித்தலும், கண்டதே காக்ஷி கொண்டதே கோலமாக இருத்தலும் பெரும்பாலாரின் தற்கால நாகரீகம்.

சிலர் திருமணஞ் செய்துகொண்டதும் தங்கள் பெற்றோரின் உரிமையினின்றும் நீங்கினதற்கு அறிகுறியாக கறுத்த அங்கியை அணிந்துகொண்டு மணமகனின் இல்லம் புகுவது ஜப்பானிய மங்கையர்களுள் ஓர் நாகரீகம்.

மணம் நடந்த காலத்திலே மணப்பெண்ணை ஓர் அழகிய கூண்டினுள் இருத்தி அவள் பெற்றோர் முதலிய உறவினர்கள் அவளைத் தோள்களிற் சுமந்து சென்று நாயகனது இல்லத்திற் சேர்ப்பது சீனர்களின் ஓர் நாகரீகம்.

சீனர்களின் பிரேத சேமம் வெகு விநோதம். எத்தனை பேர் பிரேத சேமத்துக்குச் செல்லுகின்றனரோ அத்தனை பெயரும் பிரேதஞ் சுமந்து மயானம் செல்லவேண்டும். இதற்கு ஏற்றவிதமாக அநேக கொம்புகளை ஒன்றுடன் ஒன்று பிணித்துப் பாடையில் அமைத்துக்கொள்ளுகின்றனர்.

தங்கள் நாயகர் இறந்ததும் ஓர் கம்பத்தை நாட்டி அதன் நுனியில் துணியைக் கட்டி அது கிழிந்து பறந்து போகும்வரையில் விதவா விரதமிருந்து, பின்னர் தான் விரும்பிய மணமகனை மணந்துகொள்வது சுமத்திரா நங்கையர்களின் வழக்கம்.

---

அன்னியனான ஒரு மனிதன் உன் குறிப்பறிந்து உனது காரியங்களைத் தன்னுடையதாகச் செய்து முடிப்பதன் இரகசியந்தானென்ன? அவன் உன் மூலமாகச் சில நன்மைகளை அடைய எண்ணி இருக்கலாம். உத்தமனானால் உன்னால் கூடிய உதவியைச் செய்யப் பின்வாங்காதே. பிறகு உன்னையே கவிழ்த்துவிடுவோனாயிருந்தாலோ—? அதிலும் ஒரு கண் வை. CVM

இலங்கை முதலிய தேசங்களில் விவசாயிகள் தங்கள் ஆடுமாடு முதலிய மிருகங்களுக்குச் சூட்டுக்கோலாற் குறிசுட்டு வைத்துக்கொள்ளுவது ஓர் வழக்கம்.

இங்கிலாந்திலே பெருநிலக் கிழவர்களாயுள்ளோர் தங்கள் நிலபுலன்களிலே வேலை செய்வோர் பிறிதிடங்களுக்குச் சென்றுவிடின், அவர்களைப் பிடித்துப் பழுக்கக் காய்ச்சிய இரும்புக்கோற்களால் அவர்கள் தேகங்களிலே குறி சுட்டுவிடல் பதினைங்காவது நூற்றாண்டிலே ஒரு பெரு நாகரீகமாக இருந்தது.

ஆடவரின் ஆயுள் பெருகும் வண்ணம் தங்கள் முகங்களில் அரிசனம் அணிந்து முழுகிக் கொள்ளுவது பண்டைக்கால மாதர்களின் நாகரீகம்.

இலங்கை முதலிய நாடுகளில் சீனப் புயர் மாவினாலே தங்கள் முகங்களைச் சுவருக்கு வெள்ளையடிப்பது போல வெள்ளை யடித்துத் தங்கள் முகங்களை மேனாட்டு மங்கையர் முகம் போல இருக்கும்படி செய்தும், சில இடங்களில்(தலைமுழுக்கு)எண்ணெய் முழுக்கு நாட்களைத் தவிர மற்ற நாட்களில் முழுகாமலிருப்பதும் தமிழ் மாதர் சிலரின் தற்கால நாகரீகம்.

மேனாட்டு நாகரீகத்தைப் பெரிதும் விரும்பும் தமிழ் மாதர் சிலர் புயர் மாவினாலே தங்கள் முகங்களிலும் குழந்தைகள் முகங்களிலும் ஒற்றடம் போட்டுக்கொள்வது மிகவும் கௌரவமான செயல் என்று கருதுகின்றனர். இது வதனத்தின் எழில் செறிந்த சருமத்தை விரைவில் சுருங்கச் செய்து இயற்கை முக அழகையும் ஒழித்து விடுகின்றது. நீடித்த காலம் இதன் அனுபவத்தைக் கண்டவர்களான ஐரோப்பிய மாதர்களே இந்த வழக்கத்தை ஒழித்து வருவதாகத் தெரிகின்றது. புயர் மாவின் பலன் இறுதியில் மூக்கை அரித்துவிடுவதாகவும் தெரிகிறது.

தமிழ் நாட்டு மாதர்கள் மஞ்சள் அணிந்துகொள்ளும் பண்டைய வழக்கப் பெருமையை நன்கு ஊன்றி அறிந்துகொள்ளவேண்டும். மஞ்சள் நாயகனின் ஆயுளை நீடிக்கச் செய்கின்றது. நீச சுவாசத்தின் நச்சுத் தன்மையை அறவே நீக்குகின்றது. மங்களகாரத்தையும் மனோகாரத்தையும் மல்கச் செய்கின்றது. சமையலறையில் அரிவையருக்கு ஏற்படும் வெப்பத்தை அகற்றுகின்றது. இன்ன பிற நன்மைகளையும் ஈட்டுகின்றது.

பரலி—சு. குழந்தைவேலன்.

கொளம்பு, சிலோன்.

---

நீண்ட நாள்வரை உபயோகிக்காவிடில் எதுவும் வலிமை குறையும். இதுவரை உபயோகியாமலே இருந்திருப்பின் அதில் அதிக கெடுதியில்லை. ஒருமுறை உபயோகித்து விட்டபின்பு—நெடுநாள் வரை உபயோகியாவிடில் அதன் சக்தி குறையும்—நாறும்—துருப்பிடிக்கும்—கெடும்.

---

நாகரீகப் பழக்கம் ஒருவனைப் பார்த்து இன்னொருவனும் பழக ஆரம்பிக்கிறான். அவன் க்ஷவரக்கத்தி வைத்திருந்தால் அவனிடம் சிறைக்கிற தினுசைக் கற்றுக்கொண்டு இவனும் ஒரு க்ஷவரக்கத்தி வாங்கிக்கொண்டுவிடுகிறான். அவன் போடுகிற ரவிக்கையின் மாதிரியைப் பார்த்து இவளும் அந்த மோஸ்தரின்படி நடக்க ஆரம்பித்துவிடுகிறான். இவ்விதமே பழக்கம் ஒருவரிடமிருந்து மற்றொருவருக்குப் பரவுகிறது.

# நினைப்பும் காரியமும்.



நினைப்பைக் காரியத்துடன் சம்பந்தப்படுத்தினாலொழிய, விவேகமான காரியசித்தி யொன்றையும் அடைதல் முடியாது. பெரும்பாலார் வாழ்க்கையாகிய சமுத்திரத்தில் நினைப்பாகிய படகை அதன்போக்கில் விட்டுவிடுகின்றனர். இன்ன காரியத்தைச் செய்து முடிக்கவேண்டுமென்ற இலட்சியமில்லாதிருத்தல் பாவமாகும்; தனக்கு அழிவும் ஆபத்தும் வராமலிருக்க விரும்புகிறவன் யாதோர் இலட்சியமுமின்றி இருத்தல் கூடாது.

ஃ

எவர் தமது வாழ்க்கையில் யாதொரு காரியத்தையும் இலட்சியமாகக் கொள்ளாதிருக்கின்றனரோ அவர் பலஹீனத்தின் அறிகுறிகளாகிய சில்லரை தொந்தரவுகளுக்கும் அச்சங்களுக்கும் துன்பங்களுக்கும் இரங்கல்களுக்கும் எளிதில் இரையாவர். அப்பலஹீனக் குறிகள், மனதாரச் செய்யும் பாவங்களைப்போலவே, எவ்விதத்திலாவது தோல்வியையும் நஷ்டத்தையும் துக்கத்தையும் உறும்படி செய்யும். ஏனெனில், பலத்தை விர்த்தி செய்துகொண்டிருக்கிற பிரபஞ்சத்தில் பலஹீனம் நீடித்து நிற்பது முடியாது.

ஃ

ஒருவன் ஒரு நியாயமான காரியத்தைத் தன் ஹிருதயத்தில் குறிப்பிட்டுக்கொண்டு, அதனைச் செய்து முடிக்க முயற்சி செய்யவேண்டும். அவன் தனது நினைப்புக்களுக்கு அக்காரியத்தை உயிர் நிலையாகக் கொள்ளவேண்டும். அஃது, அவனுடைய அக்கால சுபாவத்தின் பிரகாரம், ஒரு வைதிக காரியமாகவோ லௌகிக காரியமாகவோ இருக்கலாம்; ஆனால், அஃது எஃதாயிருப்பினும், அதனிடத்தில் அவனது நினைப்பின் சக்திகளையெல்லாம் உறுதியாக ஒருமுகப்படுத்தவேண்டும். அக்காரியத்தைத் தனது பிரதான கடமையாகக் கொண்டு, கணத்தில் அழிந்துபோகும் மனோவிருப்பம் மனோராஜ்ஜியம் மனோபாவனை முதலியவற்றில் தனது நினைப்புக்களைத் திரியவிடாமல் அதனைச் செய்துமுடித்தற்கு முயலுதல் வேண்டும். இதுதான் தன்னடக்கத்திற்கும் மனதின் ஏகாக்கிரத்துக்கும் நல்ல வழி. தான் கருதியுள்ள காரியத்தைச் செய்து முடித்தலில் பலமுறை தவறினும், பலஹீனம் நீங்கி பலம் பெறுகிறவரையில் தவறுவது சகஜமே. அவன் அடையும் ஒழுக்கத்தின் பலம் அவனுடைய உண்மையான வெற்றியின் அளவையாக இருக்கும்; இஃது, அவன் எதிர்காலத்தில் பெறும் சக்திக்கும் வெற்றிக்கும் ஓர் புதிய ஆரம்ப ஸ்தானமுமாகும்.

சா. கா. அப்துர் ரஜாக்.

---

ஆபத்துக்கு உதவும் ஆப்த நண்பர்கள் ஒன்றிரண்டு போவது இருப்பரா? எத்தனை நண்பர்கள் உங்கட்கு இருப்பதாக நீங்கள் எண்ணுகிறீர்கள்? உலகிலுள்ளோர்களெல்லாம் நேசர்கள்தானா? எல்லாருக்கும் அவர்கள் கேட்பவற்றையெல்லாம் கொடுக்க சாத்தியப்படுகிறதா? அவ்விதம் தருவதில் வித்தியாசம் அணுவளவாவது காட்டாமலிருப்பதற்கு முடிகிறதா?






பிரான்சு தேசத்தில் ஒரு ஸ்திரீ மிக்க செலவாளியாய் தன்னிடமிருந்த திரவியத்தையெல்லாம் வீண் விரயம் செய்து, கடன்களும் பட்டு அதைத் திருப்பிக் கொடுக்க முடியாமல் ஜெயில் வாஸமடைந்தாள். ஒரு நாள் ஜெயிலை விநோதமாய்க் காண்பதற்காக ஒரு அம்பட்டன் வந்தான். இவன் அழகுள்ள இந்த ஸ்திரீயைக்கண்டு மோகிதனாய் அருகில் வரவே, அந்த சுந்தராங்கியும் அதை யறிந்து அத்யந்த ஸந்தோஷத்துடன் "ஐயா, வாரும், உட்காரும், உம்மைக் கண்டவுடன் என் மனம் மிகு குதூகலத்தால் துள்ளுகின்றது; ஏதோ சுப சூசகங்கள் தோன்றுகின்றன. நல்ல திருக்கட்டும்; உமக்குக் கல்யாணமாயிற்றா யென்றாள். அவன் விவாகமாக வில்லை யென,



மாது :—ஏன் ஆகவில்லை?

அம்பட்டன் :—என்னை யாரும் கல்யாணம் செய்து கொள்வதாய்ச் சொல்லவில்லை.

மாது:—நல்லது, இப்போது யாரேனும் விவாகம் செய்து கொள்வதாய்ச் சொன்னால் உமக்கு இஷ்டந்தானா?

அம்பட்டன் :—ஆஹா! இதோ தயார்.

மாது :—அப்படியானால் என்னை மனைவியாக்கிக் கொள்கிறீரா?

அம்பட்டன் :—தடையேயில்லை. காத்திருக்கிறேன்.

மாது :—இப்போதே இவ்விடத்தில் கல்யாணத்தை முடித்துக்கொள்ளலாமா? உடனே ஏற்பாடு செய்யும்.

---

நேரில் கண்டு கண்குளிரப் பார்த்துப் பேச ஆவல்கொள்வோன் அனாவசிய உபசாரமாயுள்ள கடிதங்களை விரும்புவதில்லை. ஒருவரைக் காணச் சென்று அவர் இல்லாது போய் ஏமாற்றத்துடன் திரும்புகிறான். பிறகு அவரிடமிருந்து அந்த சமயம் தான் இல்லாததற்கு வருந்திக் கடிதம் வருகிறது. அதை அன்புடன் பெறுவதேயன்றி உபசார பதில் எழுத மனம் முந்துவதில்லை. நேரில் காணவே ஆவலதிகமாகிறது. பெரிய விருக்ஷங்கள் மழையையே விரும்புகின்றன. பெரிய அன்பினர் சந்திப்புக்கே ஆகின்றனர்.



அம்பட்டன் ஆகட்டு மென்று ஒரு பாதிரியாரை அழைத்து வந்து சில சாக்ஷிகள் முன்பாக விவாக சடங்கைச் செய்து கல்யாண பத்திரம் எழுதினன். இரண்டு பேரும் கையெழுத்திட்டனர். ஒரு நொடியில் திருமணம் முடிந்தது. பின்னர் அந்தப் பிரான்சிய ஸ்திரீ சிறைச்சாலை அதிகாரியை நோக்கி, "ஐயா, எனக்கு விவாகமாயிற்று; இவர்தான் என் புருஷர்; நான் பட்ட கடனை இவர் தீர்க்கவேண்டும்; இது பிரான்சு லாவின் அபிப்பிராயம்; ஆனதால், இனி அவரே ஜவாபுதார்ரி; என்னைச் சிறையினின்றும் விட்டு விடலாம்" என்றான். ஜெயில் அதிகாரி அவ்வாறே அந்த அழகிய ஸ்திரீயை வெளியே போகச்சொல்லி, புது மாப்பிள்ளையான அம்பட்டனை யழைத்து சிறைச்சாலைக்குள்ளே தள்ளி விட்டுக் கதவைப் பூட்டினன். திடீரென்று கல்யாணப்பிள்ளை கைதியானன். பிரெஞ்சு ஸ்திரீ யுக்தியால் தப்பித்துக்கொண்டு ஓடிப் போனன். இதைப்போல் சிலர் யுக்தியால் பிறர்மீது பழியைப் போட்டுத் தாங்கள் தப்பித்துக் கொள்வது முண்டு.



ராமன் :—தீபாவளி எப்படி யிருந்தது ?

கேசவன் :—அதற்காகக் கடன் பட்டதே அதிகமாயிருந்தது.

ஃ

தப்பு :—முன்பு அவரையே அதிகமாகச் சுற்றிக் கொண்டிருந்தாயே? இப்போது அந்தப்பக்கமே உன்னைக் காணேமே ?

சுப்பு :—அவரிலும் மேன்பட்ட பெருமை யுள்ளவனென்பதைக் காண்பித்துக்கொள்வதற்குத்தான் அந்தப் பக்கம் வராமலிருக்கிறேன்.

ஃ

சேஷி :—இந்தக் குடத்தின் மேலே என்னவோ பேரு இருக்கு அது என்ன வென்று பாருங்கோ, இரண்டு ரூபாய்க்கு ஜுதை வாங்கினேன்.

---

பெரிய பதவிகளுக்கு வந்த அன்பர்கள் தங்களின் பூர்வமித்திரர்களை மறவாமல் அவர்களுக்கு அடிக்கடி உதவிகள் செய்து சந்தோஷப்படுகிறார்கள். இது பிறவிக்குணத்தைச் சேர்ந்தது. கடவுளின் ஆசி எந்நாளும் இன்னோர்க்கு உண்டு.

நாணுவய்யர் :—என் பேரல்லவா இதில் இருக்கு எங்கள் வீட்டில் காணு மற்போன குடை மல்லவா இது. இதை நான் தாமுடியாது.

ஃ

மாதவன் :—உன் மனைவிபோய் விட்டாலும் மருமகன் இருக்கிருளல் லவா உன்னைக் கவனிக்க ?

வரதன் :—அவரவர்களுக்கு மனைவி யொருத்தியிருந்து கவனித்தது போல் மற்றவர்கள் கவனிக்கமுடியாது. தாய் மனைவி இருவரில் ஒருவராவது இருக்கவேண்டும்.

“ ஒரு பெண் ஜன்னல் வழியாக மாடியிலிருந்து பார்த்து அப்பா அதோ தெருவில் போகிற அவனையாவது கட்டிக் கொள்வேனே தவிர, நீங் கள் பார்த்திருக்கும் மனிதனை மணக்க மாட்டே னென்று உரக்கச் சொன்னுள். தெருவில் சென் ருேன் இதைக்கேட்டு மாடியின் ஜன்னலை நோக்கி அங்கே அப்பெண்ணைக்கண்டு பிரமிக்க, அப்பெண் ணும் இவனைக்கண்டு காதல்கொள்ள, பின் எத்த னையோ இடையூறுகளை யெல்லாம் கடந்து வெகு நாளைக்குப்பின் இவ்விருவர்க்கும் விவாகம் நடக் கின்றது. தெருவிற் செல்வோனையாவது மணப் பேன் என்ற சொல் கடைசியில் உண்மையாய் விடுகிறது.



---

லோகோபகாரி, சுதேசமித்திரன், தாருல் இஸ்லாம், ஆநந்த போதினி, ஆநந்த விகடன், இந்தியா, திராவிடன், இந்துசாதனம், குடியரசு, சுதந்திரச் சங்கு, அமிர்த குணபோதினி—இப்பத்திரிகைகளெல்லாம் ஒன்றைப் பார்த்து ஒன்று செய்யாமல் அந்தந்தப் பத்திரிகைகள் தாங்கள் அமைத்துக்கொண்ட சுயேச்சையான அமைப்பின் வழியிலேயே நாளதுவரையும் நடந்துவருகின் றன. ஒவ்வொரு பத்திரிகையின் அமைப்பும் ஒவ்வொருவித அழகாகும். ஒன்றின் அழகும் அமைப்பும் மற்ருென்றில் இல்லை. மல்லிகைப் புஷ்பம் ஒருவித அமைப்பு, ரோஜாமலர் மற்ருெருவித அமைப்பு, மகிழம்பு வேருெரு அமைப்பு, தாழம்பூ இன்னொரு அமைப்பு, அப்படியே மேற்கூறிய பத்திரிகை களின் அமைப்பும் வாசனையும் அழகுகளுமாம்.

---

ஒருவர் தமது மூக்குக் கண்ணுடியை எங்கு வைத்தோமென்று ஆத்திரத் துடன் தேடுகிருர். மேஜைக்குள் இருப்பனவற்றை யெல்லாம் வெளியில் கோபத்துடன் எறிகிருர். பிறகு மூக்குக்கண்ணுடி டப்பி கிடைக்கவே சாந்த மாகி அதைத் திறக்கிருர். அதற்குள் கண்ணுடியைக் காணேம். எப்பொழு தும் டப்பிக்குள் கண்ணுடியை வைக்கவேண்டியது ஒரு முக்கிய விஷயம் என்று தமக்குப் புத்தி சொல்லிக்கொண்டு மறுபடி தேட ஆரம்பிக்கிருர். பின் திடீரென்று தாம் தேடுவதை நிறுத்தி மௌனமாய் உட்கார்ந்துவிடுகிருர். ஏன் அப்படி ? மேஜைக்குள்ளிருந்து வெளியிலெறிந்த புஸ்தகத்துக்குள் வைத்த ஞாபகம் இப்போதுதான் அவருக்கு வந்தது. உடனே புஸ்தகத்தைத் திறக்க அதனுள் கண்ணுடியுமிருக்கிறது. யாவும் மறதியின் திருவிளையாடலே !

## மிச்சம் வருவதில்லை.



சிலரிடம் ஒரு சாமானை வாங்கிவரும்படிப் பணம் தந்தால் வாங்கினதுபோக மிச்சம் திரும்பி வருவதேயில்லை. அவர்களே கொடுப்பார்கள் என்று பலநாள் காத்திருப்பினும் கிடைப்பதில்லை. கொடுத்த பணத்திற்கு சாமான்கள் சில அகப்படாவிட்டால் அந்த மிச்சப் பணமும் தருவதில்லை. ஒரு பாத்திரம் வாங்க ஆறு ரூபாய் தந்தால் ஐந்து ரூபாயில் பாத்திரத்தின் விலை அடங்கினாலும் பாக்கி ஒரு ரூபாயைத் தர மனமில்லாமல் அதற்கும் ஏதாவது வண்டிச் செலவு அது இது என்று சொல்லி சரிசெய்துவிட எண்ணுகிறார்கள். ஒரு சாமானுக்காக நாம் ஐந்து ரூபாய் தந்தால் அந்த சாமானை மூன்றேமுக்கால் ரூபாய்க்கு வாங்கியதாயிருந்தால், பாக்கி ஒன்றேகால் ரூபாயைத் திருப்பித் தர மனமில்லாமல் அதற்கும் ஏதாவது ஒரு கணக்கு சொல்லிவிட நினைக்கிறார்கள். அந்த சாமானின் விலையே நாலரை ரூபாய் என்றுவிடுகிறார்கள். அதிலும் பாக்கி எட்டணா இருக்கிறதற்கு ஒரு பதிலும் சொல்வதில்லை. அதை அவர்கள் வாங்கிவந்ததற்குத் தரவேண்டிய வண்டி வாடகை காபிஹோட்டல் முதலியவற்றில் நாமே சேர்த்து எண்ணிக்கொள்ளவேண்டுமென்பது அவர்களுடைய அபிப்பிராயமோ என்னவோ! இது விநோதமன்றோ? இன்னொரு வேடிக்கையையும் கேளுங்கள். சிலநண்பர்களிடம் ஒருரூபாய் கடன் கேட்டால் பதினாலு அணா தந்து பாக்கி இரண்டணா செலவாகிவிட்டதென்கிறார்கள். ஐந்து ரூபாய் கடன் கேட்டால் நான்கு ரூபாய் பதினாலு அணா தந்து என்னிடம் வேறு பணம் இல்லையென்கிறார்கள். ஆனால், திரும்பப் பெறும்போதோ முழு ஒரு ரூபாயாகவும், முழு ஐந்து ரூபாய் நோட்டாகவும் பெற்றுக்கொண்டுவிடுகிறார்கள். இப்படிப் பிடித்துக்கொண்டு தந்தது வட்டிபோலும்! இவ்விதம் செய்வோர் மிக்க ஆப்த நண்பர்களாகவும், நமக்கு எவ்வளவோ உதவிகள் செய்தவர்களாகவும் இருக்கிறார்கள். ஆதலால், அவர்களைக் கோபிக்கவும் மனம் வருகிறதில்லை. நமது அருமை நண்பர்களின் தாழ்வான மனப்போக்குக்கு வருந்தாமலிருக்கவும் முடிகிறதில்லை. அவர்கள்மீதுள்ள அன்பால் அவர்களின் குற்றத்தை எடுத்துக்காட்டித் திருத்தவும் வேண்டியிருக்கிறது. அவ்விதம் செய்யின் அவர்களுக்கோ கோபம்வருகிறது. இது பெரிய தர்மசங்கடம்தான்.

# " அமிர்த குணபோதினி "

## ஆங்கீரஸ வருஷத்திய கார்த்திகை மாத பஞ்சாங்கம்.

| யோகம் | இங் | தேதி | வார | திதி, நக்ஷத்திரம், விரதாதிகள் முதலியவை. |
|---|---|---|---|---|
| | | | | [ரூபதி, சூன்யர்க்கம், முடவன் முழுக்கு. |
| அ-சி | 15 | 1 | செவ் | துவி-29-9, ரோ-24-49, விருச்சிகரவி 16-33, விஷ் |
| சி | 16 | 2 | புதன் | திரி-34-42, மிரு-31-35, திரிதியை அசுபம். |
| ம-அ | 17 | 3 | வியா | சது-29-38, ஆரு-37-45. |
| சி-உ | 18 | 4 | வெள் | பஞ்-43-43, புந-43-3. |
| சி-ம | 19 | 5 | சனி | ஷஷ்-46-35, பூச-47-15, ஸப்தமி அசுபம். |
| சி-ம | 20 | 6 | ஞா | ஸப்-47-56, ஆயி-49-59. |
| ம-சி | 21 | 7 | திங் | அஷ்-47-27, மக-51-2, கால பைரவாஷ்டமி. |
| சி-அ | 22 | 8 | செவ் | நவ-45-11, பூர-50-11, சாபாயனம் 28-31, தசமி |
| அ-ம | 23 | 9 | புதன் | தச-40-54, உத்-47-29. [அசுபம் |
| சி | 24 | 10 | வியா | ஏகா-34-56, ஹஸ்-42-52, ஸர்வைகாதசி கரிநாள். |
| சி | 25 | 11 | வெள் | துவா-27-27, சித்-37-6, பிரதோஷம். |
| அ-சி | 26 | 12 | சனி | திர-18-51, ஸ்வா-30-9, சிவராத்திரி, திதிதுவயம். |
| உ-ம | 27 | 13 | ஞா | சது-9-30, உப-●-50-16, விசா-22-35, அவமா. |
| சி | 28 | 14 | திங் | பிர-50-14, அநு-14-48, மார்க்கசிரசுத்தம். |
| உ-அ | 29 | 15 | செவ் | துவி-41-29, கேட்-7-49, திந்திரிணீ கௌரீவிரதம். |
| ம-அ | 30 | 16 | புதன் | திரி-33-53, மூல-0-37, உப-54-40, திரிதியை அசுபம், ஷாபான்மீ 1உ |
| சி | 1 | 17 | வியா | சது-27-47, உரா-51-43, கரிநாள். [பூஜா. |
| ம-சி | 2 | 18 | வெள் | பஞ்-23-34, ஸ்ரவ-50-5, பதரீ கௌரீவிரதம் நாக |
| சி-அ | 3 | 19 | சனி | ஷஷ்-21-28, அவி-50-35, சம்பா ஷஷ்டி ஸப்தமி |
| சி | 4 | 20 | ஞா | ஸப்-21-35, சத-53-10, மித்ர ஸப்தமி. [அசுபம். |
| சி | 5 | 21 | திங் | அஷ்-23-43, பூட்-57-31. |
| அ | 6 | 22 | செவ் | நவ-27-37, உட்-60-0. |
| சி-உ | 7 | 23 | புதன் | தச-32-51, உட்-3-27. [தசி. |
| சி-அ | 8 | 24 | வியா | ஏகா-38-54, ரே-10-21, ஜீவவார கைசிக ஸர்வைகா |
| அ-சி | 9 | 25 | வெள் | துவா-45-23, அசு-17-46, மத்ஸ்ய கண்ட துவாதசி |
| சி-அ | 10 | 26 | சனி | திர-51-48, பர-25-16, சனிப்ரதோஷம் பரணி தீபம் ஹநுமத் ஜயந்தி. [கௌரீ விரதம். |
| சி | 11 | 27 | ஞா | சது-57-53, கிரு-32-36, கிருத்திகாதீபம் பாஷாண |
| அ | 12 | 28 | திங் | ○ 60-0, ரோ-39-30, விஷ்ணு-ஸர்வாலய-தீபம், திருக்கழுக்குன்றம் சங்கு அபிஷேகம். |
| சி-ம | 13 | 29 | செவ் | ○ 3-28, மிரு-45-53. |
| சி | 14 | 30 | புதன் | பிர-8-27, ஆரு-51-37, சாபரவி 53-31-மார்க்கசிர பருவம் விருச்சிக-சாப-துவிதியாதிதி. |

விருச்சிகஸ்ரீ (5-29)

டிசம்பர்

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ரா | 15உக்கு ராசி | | |
| சனி | | | குரு கேது |
| | ரவி புத | சுக் | |